'அந்த
அதிகரித்த
வெண்மை
எங்கிருந்து
வருகிறது?'

# டினோபால் வெண்மை பளிச்சிடச் செய்வதில் இணையற்றது.

துவைத்த துணிகளைக் கடைசியாக அலசுவதற்கு முன், தண்ணீரில் சிறிதளவு டினோபால் சேர்த்துப் பாருங்கள், உங்கள் வெள்ளைத் துணிகளெல்லாம் எப்படி மேலும் வெண்மை பளிச்சிடுகின்றன! சட்டைகள், புடவைகள், டவல்கள், விரிப்புகள் எல்லாம் எப்படி அதிகரித்த வெண்மை துலங்க விளங்குகின்றன!

இந்த அதிகரித்த வெண்மைக்கு ஆகும் செலவுதான் என்ன? துணி ஒன்றுக்கு ஒரு பைசாவுக்கும் குறைவுதான்! கால் தேக்கரண்டி அளவு டினோபால் ஒரு வாளித் துணிகளை வெண்மை பளிச்சிடச் செய்கிறது.

விஞ்ஞான ரீதியாகத் தயாரிக்கப்பட்ட டினோபாலை எப்பொழுதும் உபயோகியுங்கள். அதனால் துணிகளுக்கு ஒருவிதமான கெடுதலும் ஏற்படுவதில்லை.



டினோபால் இப்பொழுது ஸீல் செய்யப்பட்ட அலுமினிய ரேக்குப் பேக்கெட்டுகளிலும் கிடைக்கிறது. ஒரு பேக்கெட் டினோபால் ஒரு வாளித் துணிகளை வெண்மை பளிச்சிடச் செய் கிறது– சிறிதும் வீணாவதில்லை, உபயோகிக்கச் சுலபமானது, தொந்தரவற்றது.




டினோபால், ஜே.ஆர்.கெய்கி, எஸ் ஏ.பால்.. ஸ்விட்சர்லாந்து அவர்களின் பதிவுபெற்ற வியாபாரச் சின்னமாகும்.

சுஹ்ரித் கெய்கி லிட்., த.பெ. 965, பம்பாய் 1 பிஆர்.

Shilpi SG 223A Tam

4. 18 மாத சந்தா தொகை முழுவதும் செலுத்திய பிறகு அங்கத்தினருக்கு மேலும் ரூ. 35.00 மதிப்புள்ள புத்தகங்களையும், 3 பரிசு புத்தகங்களையும் டிரஸ்டார் அனுப்பி வைப்பார்கள். இவைகளைப் பெற அங்கத்தினர் முன் செய்ததுபோல் செய்யவேண்டும்.

5. 18 மாதங்களுக்கும் சந்தா செலுத்த முடியாமற்போன அங்கத்தினர்களுக்கு, அவர்கள் செலுத்திய தொகையளவு மதிப்புள்ள புத்தகங்கள் அனுப்பப்படும். இவ்வங்கத்தினர்கள் புத்தகங்களுக்கான பாக்கிங் மற்றும் தபால் செலவையும் ஏற்கவேண்டும்.

**இத் திட்டத்தில் சேர்ந்து 18 மாதங்களும் சந்தா செலுத்தும் அங்கத்தினர் அடையும் லாபம் என்ன?**

| | | | |
|---|---|---|---|
| i) அங்கத்தினர் தேர்ந்தெடுக்கும் புத்தகங்களின் மொத்த மதிப்பு | ... | ரூ. | 90.00 |
| ii) 12 பரிசு புத்தகங்களின் மதிப்பு | ... | ரூ. | 20.00 |
| iii) இலவசமாகப் பெறும் புத்தகப் பட்டியலின் மதிப்பு | ... | ரூ. | 1.00 |
| iv) இலவசமாகப்பெறும் "புத்தக நண்பன்" 18 பிரதிகளின் மதிப்பு | ... | ரூ. | 9.00 |
| v) பாக்கிங், தபால் செலவு இலவசம் | ... | ரூ. | 10.00 |
| | | ரூ. | 130.00 |
| அங்கத்தினர் செலுத்தும்தொகை | | ரூ. | 90.00 |
| அங்கத்தினர் அடையும் லாபம் | | ரூ. | 40.00 |

**முதல் மாத சந்தா கட்டியவுடன் பரிசாக கொடுக்கப்படும் புத்தகங்கள்:**


பனிப்படலத்துப் பாவை


ஆரம்ப நீதி மார்க்


தாயார் கொடுத்த தனம்


நிலம் தரும் செல்வம்


சதோற்சவம்


காகிதச் சிற்பிகள்


பெரும் புகழும்


வாழ்வதற்கு வழி

**கீழ்க்கண்ட கூபனை உடனே பூர்த்தி செய்து அனுப்பி அங்கத்தினர் ஆகுங்கள்:**

## தென் மொழிப் புத்தக டிரஸ்ட்
### 25, ஸ்டர்லிங் ரோடு, சென்னை-34

ஐயா,

"வீட்டு நூலகம்" அமைக்கும் உங்கள் திட்டத்தில், அதன் நிபந்தனைகளுக்குட்பட்டு, அங்கத்தினராக சேர விரும்புகிறேன். இதற்கான முதல்மாத சந்தாவான ரூ. 5.00 மணியாடர் மூலம்* அனுப்பியுள்ளேன். விளம்பரத்தில் காட்டியுள்ள எட்டு பரிசு புத்தகங்களில் எனக்குப் பிடித்த மூன்று புத்தகங்களின் பெயர்களை கீழே கொடுத்துள்ளேன்.

1
2
3

பெயர் ..............................

ஊர் : .................. கையொப்பம் ..............................

தேதி : .................. முழு விலாசம் ..............................

..............................

*குறிப்பு: சந்தா தொகை எப்பொழுதும் மணியாடர் மூலம் தான் அனுப்பப்பட வேண்டும். சென்னையில் வசிக்கும் அங்கத்தினர் சந்தா தொகையை டிரஸ்டின் அலுவலகத்தில் நேரில் கட்டி ரசீது பெற்றுக் கொள்ளலாம்.

1966, மார்ச் 10ந் தேதிக்குள் அங்கத்தினராக சேருவோருக்கு அதிகப்படியாக ஒரு பரிசு புத்தகம் அளிக்கப்படும்.

1/SLB-1 TAM


இது தர்மயுத்தமா?
காங்கிரஸ்
பாதுகாப்புச் சட்டம்


எதிர்க்கட்சிகள்


திரௌபதியா?
அசோகமேதா


பொதுஜனத் தீர்ப்பு


PK

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்



மலர் 25 ● இதழ் 32



# வரிக் குறைப்பே தேசத்தின் தேவை

எல்லா வரிகளும் இறுதியில் மக்களுடைய சம்பாத்தியத்தின் மீது விதிக்கப்படுபவைதாம். எனவே, ஏழைகளின் மீதன்றி, வரியைத் தாங்கக் கூடியவர்களின் மீது மட்டுமே சுமத்துவது சர்க்கார் கொள்கை எனில் அவர்களின் மீது வருமான வரி ஒன்றை மட்டும் விதித்தாலே போதும். செலவு வரி, சொத்து வரி, மரண வரி, நன்கொடை வரி என்றெல்லாம் பல வரிகளை விதிக்காமல், வரி தரக்கூடியவர்களின் சக்திக்கு ஏற்பவும், தேசத்தின் நலனை ஒட்டியும் அவர்கள் மீது வருமான வரி யொன்றை மாத்திரமே உசிதமான விகிதங்களில் விதித்துவிடலாம். மற்ற வரிகள் சர்க்காருக்குத் தேவையான வருமானத்தை ஈடு கட்டுவது தவிர வேறெந்த சமூக நலனையும் பூர்த்தி செய்யவில்லை. வருமான வரி வசூலிக்கும் செலவு இல்லாத முறையில் சர்க்கார் சிப்பந்திகளுக்குச் சம்பளம் நிர்ணயித்து விடலாம். அதாவது வருமான வரியைக் கழித்தே சர்க்கார் சிப்பந்திகளின் சம்பளங்களை நிர்ணயித்து விடலாம். இதனாலும் நாட்டில் வருமான வரி ஒன்றையே புது விகிதத்தில் அமைப்பதாலும் சர்க்காரின் அலுவல்கள் பெருமளவுக்குக் குறையும். இச்சீர்திருத்தங்களினால் சர்க்கார் வருமானம் அதிகமாகப் பாதிக்கப்படாது; அப்படியே ஓரளவு பாதிக்கப்பட்டாலும் தற்போது பற்பல வரிகளை வசூலிப்பதற்காக ஆகும் அநாவசியச் செலவு குறையுமாதலால் நிகரத்தில் லாபமாகவே இருக்கும். மக்களின் காலம் மிச்சமாகும்; அவர்களுக்குப் பலவிதமான வரிவசூல்களினால் ஏற்படும் நரம்புத் தளர்ச்சியும் இராது.

1964 — 65ஆம் ஆண்டின் வருமான வரி வசூல் மொத்தம் ரூ. 294 கோடியாகும். மத்திய சர்க்காரின் விற்பனை வரி கலால்வரி இவையோ ரூ. 1247 கோடி. ஒரு குறிப்பிட்ட வருமானமுள்ளவர்கள் மட்டுமே நேரடியாகத் தரும் வருமான வரித் தொகையானது, பண்டங்களின் மீது விதிக்கப்பட்டு அவற்றை வாங்கும் எல்லா மக்களாலும் தரப்படும் மறைமுக வரித் தொகையில் கால் பங்குதான். இது சோஷலிஸ கோஷத்துக்கே முரணாக இருக்கிறது. பண்டங்களின் மீது விதிக்கப்படும் மறைமுக வரிகள் பெரும்பாலும் ஏழை மக்களின் மீதே விழுகின்றன.

ஓர் ஏழை மண்ணெண்ணெய் வாங்கி அதற்கு விலை தரும் போது, அவ்விலையில் 45 சதவிகிதம் அவனையறியாமலே வரிக்குத்தான் போகிறது. அவன் வாங்கும் சர்க்கரையின் விலையில் பாதி வரியாகும். வத்திப்பெட்டிக்காகத் தரும் காசில் 62 சதவிகிதம் வரி. இதுவா சோஷலிஸம்? கடந்த பதினைந்தாண்டுகளில் மத்திய விற்பனை வரி 67 கோடி ரூபாயிலிருந்து 827 கோடிக்கு உயர்ந்திருக்கிறது. இறக்குமதிப் பண்டங்களின் மீதான வரி 157 கோடியிலிருந்து 420 கோடிக்கு உயர்ந்திருக்கிறது.

தண்ணீர் எப்போதும் கீழ் மட்டத்தையே நோக்கிப் பாய்வது போல், காங்கிரஸ் சர்க்கார் பணக்காரர் மீது விதிக்கும் நேர்முக வரிகளும்கூட இறுதியில் பொருளாதாரத்தில் கீழ் நிலையிலுள்ளவர்களின் மீதே தனது பாரத்தைச் சுமத்துகிறது. இச்சமயத்தில் காங்கிரஸ் கட்சி உண்மையான சோஷலிஸ பாணியை இலட்சியமாகக் கொண்டிருப்பின் பொதுமக்கள் வாங்கும் பண்டங்களின் மீது வரியே விதிக்கக் கூடாது.

நான் சொல்லியுள்ள வரிக் கொள்கை சர்க்கார் திட்டமிட்டுள்ள செலவுக்குப் போதாது எனில், அப்போது

சோஷலிஸம் என்று தாங்கள் சொல்வது நடைமுறைக்குச் சாத்தியமல்ல என்று சர்க்கார் வெளிப்படக் கூறவேண்டும். இப்போது போல் பெரும் திட்டங்கள் போடாமல், நமது ஏழை நாட்டின் மொத்த வருமானத்துக்கு ஏற்றபடி சர்க்கார் செலவைக் குறைத்துக் கொள்ள வேண்டும். இப்போது நமது சராசரி வாழ்க்கைத் தரம் மிகவும் தாழ்வாகவே உள்ளது. இதை வரிகளின் மூலம் மேலும் தாழ்த்தி விடாமலாவது இருக்க வேண்டும். நம் நாட்டின் நாற்பது கோடி மக்களும் இப்போதுள்ள நிலைமையிலாவது வாழ்க்கையைத் தொடர்ந்து நடத்த வேண்டுமாயின் சர்க்கார் எவ்வளவு குறைவாக வரி போட வேண்டும் என்பதைக் கணக்கிட்டு அதற்குச் சர்க்காரின் செலவைச் சரிக்கட்ட வேண்டும். தேசத்தின் மொத்த வருமானத்திலிருந்து, மக்களின் இன்றைய வாழ்க்கைச் செலவைக் கழித்தால் எஞ்சியுள்ளது என்ன என்று பார்த்து அதன் மீதே வரி போட வேண்டும். இப்படிக் கணக்கிட்டுப் பார்த்தால் இன்று தேசிய வருமானத்தில் பதினான்கு சதவிகிதம் பெரும்பாலும் மறைமுக வரிகளாகப் பொதுமக்களின் மீது விதிக்கப்பட்டிருப்பது எப்போர்ப்பட்ட கொடுமை என்று தெரியும்.

பிரத்தியட்ச உணர்வுடன் சிந்திக்க வேண்டியது அத்தியாவசியம். நம் மக்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்துவது அசாத்தியமல்ல. ஆனால் ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு அவர்களிடமிருந்து நாம் பெற்றுள்ள படாடோப ஆலைத் தொழில் திட்டங்களை அவர் காண்பித்த அதே அவசரத்துடன் பின்பற்றினால் முன்னேற முடியாது. இந்தத் திட்டத்துக்கும், இதன் வேகத்துக்கும் உள்நாட்டுப் பொருளாதார வசதிகள் போதா. இதனால்தான் அந்நியக் கடன்கள் பெருகுகின்றன. அவை முன்னேற்றத்தையே பொய்ப்பிக்கும் அளவுக்குப் பெருகிவிட்டன. ஏற்கனவே வாங்கிய கடன்களை அடைப்பதற்காக ஜப்பான், அமெரிக்கா, பிரிட்டன், மேற்கு ஜெர்மனி, பிரான்ஸ் இவற்றிடமும் உலக பாங்கிடமும் இந்தியா புதுக் கடன்கள் கேட்டிருப்பதாக டோக்கியோவிலிருந்து ஒரு செய்தி வந்திருக்கிறது. புதுக் கடனாயினும் பழைய கடனாயினும் இறுதியில் நாம்தான் தீர்க்க வேண்டும். இந்தத் தோல்வி ஒருபுறமிருக்க உள்நாட்டிலும் திட்டத்துக்காகத் தாங்கவொண்ணாத விகிதங்களில் வரிகள் விதிக்கப்பட்டுள்ளன. அந்நியக் கடன்களுக்கான வட்டி உயர்ந்து வரும் போதே, பாதுகாப்புச் செலவும் ஏறியபடி உள்ளது. உள்நாட்டு வரிகள், அந்நியக் கடன்கள் யாவும் போதாமையால் காகிதப் பணம் அச்சிட்டு விநியோகமாகிறது. இதனால் பணவீக்கம் உண்டாகி விலைவாசிகள் ஏறுகின்றன. மொத்த விளைவு: முன்னேற்றத்துக்குப் பதில் வறுமையையே காண்கிறோம். திவாலாகும் நிலைமையின் விளிம்பில் தேசம் தொற்றிக் கொண்டு நிற்கிறது. அந்நியத் தாக்குதலால் ஏற்பட்ட நெருக்கடி, தவறான திட்டத்தாலும் ஊழல் நிர்வாகத்தாலும் ஏற்பட்டுள்ள உள்நாட்டு நெருக்கடியின் விசுவரூபத்துக்கு முன்னால் அற்பமாகவே தோன்றுகிறது. நாம் விவகாரங்களை விநயத்துடனும் விவேகத்துடனும் நிர்வகித்திருப்போமாயின் சுபிட்ச வல்லரசுகளின் மரியாதையைப் பெற்றிருப்போம். மாறாக இன்று அவற்றுக்கு நாம் கடனாளியாக நிற்கிறோம். கடன் தீர்க்க வகையில்லாதவர்கள் எத்தகைய மதிப்பைப் பெற முடியும் என்பதை நாம் அறிவோம்.

சர்க்கார் எல்லாத் துறைகளிலும் சர்வப்பிரவேசம் செய்த போதிலும் நமது பொருளாதாரம் தனியார் — சர்க்கார் இருவரும் பங்குபெறும் 'கலப்பு'ப் பொருளாதாரம் என்றே கூறப்படுகிறது. இவ்வாறு தனியார்த் துறையை ஓரளவுக்கேனும் அங்கீகரித்துள்ள வரையில் அவற்றில் முதலீடுகள் செய்யப்படுவதற்கும் இடமளிக்க வேண்டுமேயன்றி, முதலீடு செய்யச் செல்வம் சேராத முறையில் வரிகளை உயர்த்தி விடக் கூடாது. சேமிப்பு இல்லாவிடில் முதலீடு செய்ய முடியாது. ஆனால் சேமிப்பே அசாத்தியமாகும் முறையில்தான் இன்று வரி போடப்படுகிறது.

சமீபத்தில் காலமான தொழிலதிபர் ஸ்ரீ அனந்தராமகிருஷ்ணன் அவர்கள் இந்தியாவிலேயே மிகவும் அதிகமான வருமான வரி செலுத்தியவர். காரணம் அவர் சட்டத்தை ஏமாற்றவோ, பொருளை மறைக்கவோ ஒருபோதும் முயலவில்லை. எளிமையான வாழ்க்கை நடத்தித் தமது சம்பாத்தியத்தையெல்லாம் தொழிலபிவிருத்தியிலேயே ஈடுபடுத்தினார். தாமே தமது நிறுவனங்களுக்கு அதிபராக இருந்து நடவடிக்கைகளையெல்லாம் பொது உலகுக்கும், சர்க்காருக்கும் பகிரங்கமாக வைத்தார். அவர் தமது சொத்துக்கள் விநியோகத்துக்கு உயில் ஏதுமே எழுதி வைக்கவில்லை என்பதைச் சிலரே அறிவர். அவர் திடீரென்று மரணமடைந்துவிடவில்லை. நீண்டகாலம் நோய்வாய்ப்பட்டிருந்தார். அவரது அறிவு தீட்சண்யமாகவே இருந்தது. தமது முடிவு நெருங்குவதையும் அவர் அறிந்திருந்தார். எனினும் அவர் உயில் எழுதாதது ஏனென்று கேட்கிறார்கள். காரணம் இதுதான்: தமது சொத்துக்களின் மீது விதிக்கப்படக் கூடிய எஸ்டேட் வரியைத் தாம் வாரிசாக நியமிக்கும் யாராலும் கொடுத்துத் தீர்ப்பது எளிதல்ல என்று அவர் அறிந்திருந்தார். அவரது நிறுவனங்களை விற்றாலும்கூட எஸ்டேட் வரிக்குத் தேவையான தொகையைப் பெறுவது சாத்தியமல்ல. எனவேதான், தாம் பெருஞ் சிரமப்பட்டு எழுப்பிய தொழில் ஸ்தாபனங்களைச் சர்க்காரே என்ன வேண்டுமாயினும் செய்து கொள்ளட்டும் என்று அவர் விட்டு விட்டார். ஸிம்ஸன் கம்பெனியில் நேர்மையான கணக்கராக வாழ்வைத் தொடங்கிய அவர் சர்க்காருக்கும், தேசத்துக்கும் நேர்மையான கணக்குக் காட்டியவராக மறைந்தார். இன்றைய சர்க்காரின் அமிதமான வரி முறை மடமைக்கு இது ஒரு சோகமான சான்று.

('ஸ்வராஜ்யா'வில் ராஜாஜி எழுதியது.)

# வாழ்த்துகிறோம்

ட்ராம்பே அணுசக்தி ஸ்தாபனத்தின் உயர்நிர்வாகத் தலைவராக டாக்டர் ஹோமி நஸ்ஸர்வான்ஜி சேத்னா நியமிக்கப்பட்டிருப்பதை வரவேற்கிறோம். பரிதாபகரமாக உயிர் நீத்த டாக்டர் ஹோமி பாபா மிகத் திறமையுடன் வகித்து வந்த பதவிக்கு யாரைப் பொறுக்குவதென்ற பிரச்னை எழுந்தபோது டாக்டர் சேத்னாதான் முற்றிலும் தகுதி பெற்றவர் என்ற ஏகோபித்த அபிப்பிராயமே பரவலாக இருந்தது. ஆசியாவிலேயே முதலாவது என்று மதிக்கப் பெற்ற 'ப்ளூடோனியம் ஆலையை' ட்ராம்பேயில் திட்டமிட்டுக் கட்டி முடித்தவர் டாக்டர் சேத்னா. உலகத்திலேயே உள்ள இம்மாதிரி ஆலைகள் ஐந்தில் இதுவும் ஒன்று. இதை உருவாக்கும்போது சில அணு ரசாயன விஞ்ஞான ஆராய்ச்சிகள் நடத்த வேண்டியிருந்தன. அவற்றை வெற்றிகரமாக நடத்தி முடித்ததுடன், இத்துறையில் அதுவரையில் பிரகரமாகியிருந்த சில விவரங்கள் தவறானவை என்பதையும் நிரூபித்து, சரியான விவரங்களைக் கண்டுபிடித்து ஜெனிவா மகாநாட்டில் உலகத்துக்கு அளிக்க இவரால் முடிந்தது. கனடா — இந்தியா ரீஏக்டர் என்ற அணுசக்தி பெறுவதற்கான ஆரம்ப ஆலையை நிறுவிய நிர்வாகஸ்தரும், கேரளநாட்டு ஆலப்புழையில் உள்ள "அபூர்வ மண் ஆலையை"க் கட்டி முடித்து இயக்கியவரும், "தோரியம் — உரோனியம் உலோக ஆலைகளை" நிறுவியவரும் டாக்டர் சேத்னாதான். ரேடியோ கதிர்களால் பாதிக்கப்பட்ட கழிவுப் பொருள்களை மனித நலனுக்குக் கெடுதல் விளையாவண்ணம் அப்புறப்படுத்துவதற்கான தனி ஏற்பாடுகளும், சலவைச்சாலையும் கூட ட்ராம்பேயின் ஆலைகளில் டாக்டர் சேத்னாவின் மேற்பார்வையில்தான் அமைக்கப்பட்டுள்ளன. தொழில் நுட்ப அறிவு மிக்க டாக்டர் சேத்னா 1959லேயே பத்மஸ்ரீ விருதும், 1960ல் என்ஜினீரிங் விஞ்ஞானத்தில் அசாதாரண செயல் ஆற்றியதற்காக சாந்தி ஸ்வரூப் பாட்நகர் பரிசும், 1966 ஆரம்பத்தில் பத்மபூஷண் விருதும் பெற்றவர். உலக விஞ்ஞானிகளிடையேயும் பெருமதிப்பைப் பெற்றவர்.



சேத்னா

இவரைப் போலவே அணு விஞ்ஞானத்தில் பேரறிவும் ஆற்றலும் பெற்றுள்ள டாக்டர் விக்ரம் ஸாராபாயும் அரசாங்கத்தினரால் பத்மபூஷண் விருது அளித்துக் கௌரவிக்கப்பட்டுள்ளார்.

தமிழ்நாட்டில், மயிலாப்பூர் அகடமி வாயிலாகச் சேவை செய்துவரும் ஸ்ரீ டி. எஸ். ராமசாமி அய்யர் அவர்களுக்குப் பத்மபூஷண் விருது அளிக்கப்பட்டுள்ளது. பரத நாட்டியத் துறைக்கு அரிய தொண்டாற்றி வரும் ஸ்ரீ ஈ. கிருஷ்ணய்யர் அவர்களுக்கும் தமிழ்நாட்டின் திரைப்பட நட்சத்திரங்களான சிவாஜி கணேசனுக்கும், பானுமதிக்கும் பத்மஸ்ரீ விருது வழங்கி இந்திய சர்க்கார் கௌரவித்துள்ளனர். இவர்களது படங்களை 17ம் பக்கத்தில் வெளியிட்டிருக்கிறோம். விருதுபெற்ற அறிஞர்களுக்கும் கலைஞர்களுக்கும் நம் பாராட்டுக்கள்.

# ஆர்ச் பிஷப் அருளப்பா

கிறிஸ்துவ மக்களின் சமயத் துறையில் உயர்ந்த ஸ்தானம் ஆர்ச் பிஷப் பதவி. சென்னைக்கு முதன் முதலாக இவ்வுயர் பதவிக்கு ஒரு தமிழர் நியமிக்கப்பட்டிருப்பது தமிழகத்துக்குப் பெருமை. ஏகநாதரின் பன்னிரண்டு திவ்ய சீடர்களில் ஒருவரான அர்ச்சகர் புனித தாமஸ் கி.பி. முதலாவது நூற்றாண்டில் சென்னை கிறிஸ்தவ தேவாலயத்தில் ஆர்ச் பிஷப்பாக இருந்ததிலிருந்து அந்தப் பரம்பரையில் பல அருளாளர்களும் கிறிஸ்துவ சமய சாதுக்களும் இங்கே பதவி வகித்துத் தங்கள் இனத்தவருடன் நாட்டு மக்களுக்கும் நல்வழியும் கல்வியும் போதித்து நற்பணியாற்றி வந்துள்ளார்கள். இந்தப் பதவிக்கு இப்போது புனித மான்ஸிஞோர் ராயப்பா அருளப்பா நியமிக்கப்பட்டிருக்கிறார். ஐம்பத்திரண்டு வயதேயான அர்ச் அருளப்பா தாம்பரத்தருகிலுள்ள தர்காஸில் பிறந்து சென்னையில் கல்வி கற்று, சமய சம்பந்தமான உயர் கல்வியையும், தேவாலய பரிபாலன முறைகளையும் ரோமாபுரியில் கற்றுத் தேர்ந்து போப்பாண்டவர் சந்நிதியில் உயர் தீட்சைகள் பெற்றுப் புனிதமடைந்தவர். அர்ச் அருளப்பாவின் பதவிக்காலம் பொற்காலமாக விளங்க ஏகநாதர் அருளட்டும்.



★

சீன அபாயம் இன்னும் இருப்பதால் நெருக்கடி நிலைமையை ரத்து செய்வதற்கில்லை என்று நமது புதிய சட்ட மந்திரி ஸ்ரீ பதக் அவர்கள் கூறியிருக்கிறார்கள். அவ்வாறாயின், சீன அபாயம் நமது வாழ்நாளுக்குள் முடிந்துவிடும் என்று அவர் எண்ணுகிறாரா? அல்லது நெருக்கடி நிலைமையினால் அழிக்கப்பட்ட ஜீவாதார உரிமைகளை அவர் முக்கியமானவையாக எண்ணவில்லையா? இப்படி அவர் கருதுவாராயின், நமது அரசியல் சாஸனம் நிரந்தரமாக அழிந்துவிட வேண்டியதுதான். அதனிடத்தைப் பாதுகாப்புச் சட்டம் பெற்றுவிடும். சட்ட மந்திரியாக உள்ள ஒருவர் இவ்வாறு பகிரங்கமாகக் கூறுகிறார் எனில் நாம் விவகாரத்தின் முடிவுக்கே வந்துவிட்டதாகத்தான் அர்த்தம்.

★

'சமீப காலமாகத் தமிழ் நாட்டில் ஹிந்தி எதிர்ப்பு மிகவும் குறைவாகவே வெளியான போதிலும் சென்னை ஒற்றைவாடைக் கொட்டகையில் நடைபெற்ற கல்லூரி மாணவர்களின் ஹிந்தி எதிர்ப்பு மகாநாட்டின்போது




பிரவேசக் கட்டணம் விதிக்கப்பட்டிருந்தும் சபை நிரம்பி வழிந்தது' என்று 'ஸ்டேட்ஸ்மன்' பத்திரிகை கூறுகிறது. சமீப காலத்தில் ஹிந்தி எதிர்ப்பு வலுவாக வெளிப்படவில்லை என்பது மேலெழுந்தவாரியாக உண்மையே. இந்நாட்களில் பொதுக்கூட்டம் நடத்த மிகவும் செலவாகிறது. அதோடு காங்கிரஸ் சர்க்கார் ஆமோதிக்காத விஷயங்களில் பத்திரிகைகளும் ஆதரவளிக்கத் தயங்குகின்றன.

ஹிந்தி எதிர்ப்பு எப்போதும்போல் வலுவாகத்தான் உள்ளது. இரு விதமாகத் தொனிக்கும் காரியங்களைச் செய்யும் காங்கிரஸின் தந்திரத்தினால் வயதான மக்களின் மனத்தைத் தாற்காலிகமாக ஒரு மூடுபனி மறைத்திருந்தாலும், கல்லூரி மாணவர்களின் தீவிரம் குறையவில்லை.

★

ஸ்ரீ லால்பகதூரின் உயிர்த் தியாகத்தினால் ஏற்பட்டுள்ள நட்புச் சூழ்நிலை பாதிக்கப்படும் வகையில் ஸ்ரீ சவான் தமது முக்கியத்துவத்தை நிலைநாட்டிக் கொள்ளக் கூடாது. இந்தப் பாங்கைக் கைவிடுமாறு நான் அவரை மரியாதையுடன் கேட்டுக் கொள்ளுகிறேன். யுத்த காலத்தில் பாதுகாப்பு மந்திரி பெறுகிற முக்கியத்துவத்தை நிரந்தரமாக நீடிக்க முயலக் கூடாது. நமது நிதி நிலைமையே அபாயகரமான எதிரியாகச் சூழ்ந்துள்ள இன்றைய பொருளாதார நெருக்கடியின்போது ராணுவ அபாயங்களை மிகைப்படுத்திக் காட்டி ஆளும் கட்சிக்கு ஆதரவு தேடுவது சரியல்ல.

★

ராஜ்ய சபையில் காங்கிரஸ் சர்க்காரை வன்மையாகவும் நியாயமாகவும் கண்டித்து அருமையான முறையில் விரிவாகப் பேசிய திரு அண்ணாதுரை அவர்களைப் பிரத்தியேக மகிழ்ச்சியுடன் பாராட்டுகிறேன். அவரைப் பின்பற்றி இரு சபைகளிலும் பிரபல பாராளுமன்ற உறுப்பினர்கள் தாக்குதலைத் தொடர்ந்து நடத்தினார்கள். உண்மையிலேயே தேசத்தின் பொருளாதாரம் சீர்கெட்டுள்ளது என்பதை ஆளும் கட்சியினர் உணரவேண்டும்; கட்சியின் நிதி நிலைமையை அபிவிருத்தி செய்வதில் காட்டும் முனைப்பை நாட்டின் நிதி நிலைமையில் செலுத்த வேண்டும். காங்கிரஸிடம் தேசத்துக்குள்ள நம்பிக்கை மடிந்துவிட்டது என்பதையும் இப்போது அது மரணமடைந்த அரசர்களின் உடல் அரச போகத்துடன் கிடத்தப்பட்டிருப்பது போன்ற நிலையிலேயே உள்ளது என்பதையும் உணர வேண்டும். சவத்துக்குத் தைலக் காப்பிட்டு நீண்ட நாட்கள் காப்பாற்ற முடியாது.

★

டெலிவிஷன் போன்ற அதி நூதனமான நாகரிகச் சின்னங்கள் குறித்து என்னுடைய கருத்துக்கு ஆட்சியாளர்கள் மதிப்புக் கொடுப்பார்களாயின், தற்போது பிரஸ்தாபிக்கப்படும் டெலிவிஷன் திட்டத்தைத் தயக்கமின்றிக் கண்டிப்பேன். இது அவசியமில்லாத திட்டம். இதனால் பயனுள்ளது என்று சந்தேகமறக் கூறமுடியாது. டெலிவிஷன் இல்லாமலே நாம் நீண்ட காலத்துக்குக் கௌரவமாக வாழ முடியும். ஆயிரக் கணக்கான கிராமங்களில் இன்று சுத்தமான குடிதண்ணீர் கிடைக்கவில்லை; சுகாதாரக் கழிவுக் கால்கள் இல்லாததைப் பற்றிக் கூறவே வேண்டாம். இச்சமயத்தில் டெலிவிஷனுக்காகக் கோடிக் கணக்கில் செலவிடுவது பொதுப் பணத்தைத் துஷ்பிரயோகம் செய்யும் குற்றத்துக்குச் சமம்.

★

ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு அவர்கள் மிகுந்த அபிமானம் வைத்திருந்த பல நாடுகளில் ஒன்றன் பின் ஒன்றாக ராணுவப் புரட்சி ஏற்பட்டு வருகிறது. 'சுதந்திரம்' பெற்ற இந்நாடுகளில் ஆட்சி ஏற்கும் சர்வாதிகாரிகள் தங்களுக்கு உதவியாக அந்நிய நாடுகளைச் சேர்ந்த ராணுவப் பட்டாளத்தைக் கூலிக்கு வைத்துக் கொண்டால்தான் உள்நாட்டு ராணுவத்திடமிருந்து தப்ப முடியும்போலும்! சர்வாதிகாரம், ராணுவப் புரட்சி இரண்டினிடமிருந்தும் உண்மையாக விமோசனம் பெறும் வழி, ஒவ்வொரு நாட்டிலும் உண்மையான ஜனநாயகம் நிலைபெற்றுப் பிரஜைகள் யாவரும் நிர்வாகத்தில் பங்கு கொள்ளும் உணர்ச்சியைப் பெற்றிருப்பதேயாகும்.

1. தியாகராயநகர் சாரதா வித்தியாலய வெள்ளி விழாக் கொண்டாட்டத்தில் தலைமை ஆசிரியை அறிக்கை வாசிக்கிறார். 2. திருமந்திர மகாநாட்டில் திரு தெ. பொ. மீனுட்சிசுந்தரம் பிள்ளைக்குத் திருவாவடுதுறை ஆதீனகர்த்தர் பொன்னுடை போர்த்திக் கௌரவிக்கிருர். 3. தமிழ்நாடு கைத்தறி காங்கிரஸின் பன்னிரண்டாவது மகாநாடு காஞ்சிபுரத்தில் நிகழ்ந்தது. 4. ராஜாஜி அவர்களின் பேரரும் திரு வி. ஆர். கிருஷ்ணஸ்வாமியின் புதல்வருமான திரு பார்த்தசாரதிக்கும் சௌ. சாந்தாவுக்கும் சென்ற மாதம் சென்னையில் திருமணம் விமரிசையாக நடந்தேறியது.









# மாணவர் உலகில் இது ஒரு பிரச்னை

பஸ்ஸில் மாணவர்கள் கலாட்டா. பிப்ரவரி 9ம் தேதி இரவில் தேனாம்பேட்டை மௌண்ட்ரோட் பகுதியில் வடக்கு நோக்கிச் சென்று கொண்டிருந்த சர்க்கார் டிரான்ஸ்போர்ட் பஸ்ஸில் மாணவர்கள் கோஷ்டி ஒன்றுக்கும் பஸ் கண்டக்டருக்குமிடையே தகராறு எழுந்தது. பஸ்ஸை நிறுத்தச் செய்து கண்டக்டர் டிக்கட் கொடுக்க ஆரம்பித்ததே காரணமாம். —ஹிந்து, பிப்ரவரி 12

டோக்கியோ சர்வகலாசாலை சம்பவங்களில் மூப்பது மாணவர்கள் காயமடைந்தார்கள். பிப்ரவரி 12ம் தேதியன்று வசீடா சர்வகலாசாலை மாணவர்கள், தங்கள் கல்விக் கட்டணத்தின் உயர்வை எதிர்த்து இருபத்தி ஐந்து நாட்களாக நடத்தி வந்த போராட்டத்தில் உச்சகட்டத்தை அடைந்தார்கள். சர்வகலாசாலைக் கட்டிடத்தின் ஜன்னல்களும் கதவுகளும் நொறுக்கப்பட்டன.

—ஹிந்து, பிப்ரவரி 14

எர்ணாகுளத்தில் கல்லூரிகள் மூடப்பட்டன. ஜனவரி 31ம் தேதியிலிருந்து எல்லாப் பள்ளிக்கூடங்களையும் கல்லூரிகளையும் மூடி விடும்படி உத்தரவிடப்பட்டிருக்கிறது. 'கேரள பந்த்' போராட்டத்தை ஒட்டிக் கடந்த இரண்டு தினங்களாக மாணவர்கள் செய்த ஆர்ப்பாட்டங்களே இதற்குக் காரணம்.... போலீஸ் கோஷ்டியினர் மீது கல்வீச்சு நடத்தியதின் காரணமாக ஐந்து மாணவர்கள் காவலில் வைக்கப்பட்டிருக்கிறார்கள். —ஹிந்து, ஜனவரி 31

காரைக்குடிக் கல்லூரி திறக்கப்படவிருக்கிறது. பிப்ரவரி 3ம் தேதியிலிருந்து மாணவர்களில் ஒரு பகுதியினரால் தோற்றுவிக்கப்பட்ட நெருக்கடிகளால் மூடப்பட்டிருந்த காரைக்குடி அழகப்பா கலைக் கல்லூரி 14ம் தேதி முதல் மீண்டும் திறக்கப் படவிருக்கிறது. ஒழுங்கு முறைக்கு அடங்காத சில மாணவர்கள் மீது நிர்வாகம் நடவடிக்கை எடுத்துக் கொண்டதின் விளைவாகவே இந்த ஆர்ப்பாட்டம் எழுந்தது. —ஹிந்து, பிப்ரவரி 14

**''இன்றைய மாணவர்களைப் பற்றித் தங்கள் அபிப்பிராயம் என்ன ?''**

''நல்ல வேளை! இன்றைய மாணவர்கள் என்று குறிப்பிட்டுச் சொன்னீர்களே! சந்தோஷம். கல்வியில் ஆர்வம், அதைப் போதிக்கும் ஆசிரியர்களிடம் பக்தி, இந்த இரண்டு குணங்களும் சம அளவில் ஒன்றாகச் சேர்ந்துதான் ஒரு மாணவனை உருவாக்குகின்றன. இந்த இரண்டு குணங்களும் இல்லாதபோது இன்னும் பழைய சம்பிரதாயப்படியே 'மாணவன்' என்று சொல்லி வருவதில் பொருளில்லை என்றுதான் நினைக்கிறேன். தமிழில் எத்தனையோ புதுப் பதங்களை உருவாக்கி அமுலுக்குக் கொண்டு வரும் இந்த நாளில் கல்லூரிக்குப் போகும் இளைஞர்களைக் குறிக்க ஒரு புதுப் பதத்தைக் கண்டுபிடிக்கலாமே! ஆனால் பழைய பதத்துக்குப் பொருத்தமாகவும் சிலர் இல்லாமல் இல்லை!

**''ஓஹோ! உங்கள் பதிலிலிருந்து அந்த நாளைய மாணவர்களுக்கும் இந்த நாளைய மாணவர்களுக்கும் நிறைய வித்தியாசம் இருக்கிறது என்று சொல்லுங்கள் !''**

''ஓர் உதாரணம் போதுமென்று நினைக்கிறேன். அந்த நாளில் நாங்களெல்லாம் கல்லூரி மாணவர்களாக இருந்த காலத்தில் கல்லூரி விவாத மேடையில் அன்றைய அரசியல் விஷயங்களையும் பிரச்னைகளையும் ஆணித்தரமாக ஆதாரபூர்வமாக அலசிப் பேசுவோம். சொற்போர் நடத்துவோம். மேடையிலிருந்து இறங்கியவுடன் எங்கள் போட்டியை மறந்து மறுநாள் படிக்க வேண்டிய பாடங்களை நினைவூட்டிக் கொள்வோம். ஆகவே பொது விஷயங்களில் எங்களுக்குப் பற்றற்ற அக்கறையும், படிப்பில் பற்று நிறைந்த ஆர்வமும் இருந்தன. பிற்கால வாழ்வில் இந்த அஸ்திவாரத்துடன் பலர் பெரும் பதவிகளை ஏற்றுக்கொள்ளவும் முடிந்தது.

''இன்றைய மாணவன் மேலெழுந்தவாரியாகப் பல்வேறு அரசியல் பிரச்னைகளைப் பற்றிப் படிக்கிறான். அந்த அளவில் மேடையில் நின்று பேச ஆசைப்படுகிறான். இந்த ஆசையில் தன் முதல் கடமையான படிப்பைப் பற்றி அவன் மறந்தே போய்விடுகிறான். மேடை விவாதத்தைக் கிழே இறங்கிய பிறகும் தொடர்ந்து நடத்தித் தான் புரிந்து கொள்ளாத விஷயத்தை மற்றவர்களுக்கு விளக்க முற்பட்டுத் தானும் ஒரு தலைவன் என்று நினைத்துக் கொண்டு தொண்டர்கள் சேர்க்க நினைக்கிறான்.

''இன்னொரு விஷயம். அந்த நாட்களில் தொழிற் சங்க இயக்கம் தொழிலாளி முதலாளி வட்டத்தில்தான் இருந்தது. இப்போது அந்த இயக்கம் கல்லூரி மாணவர்கள், கல்லூரி நிர்வாகம் என்ற வட்டத்திலும் நுழைந்து விட்டது. தாங்கள் எல்லோருமே போராட்டம் நடத்தத் துடிக்கும் தொழிலாளிகள் என்று அவர்கள் நினைத்துக் கொண்டு விடுகிறார்கள்!''

**''மாணவர்கள் வேலை நிறுத்தம், போராட்டம் என்பதெல்லாம் இப்போது மிக சகஜமான விஷயமாகி விட்டனவே! இதற்கு அடிப்படைக் காரணம்தான் என்ன ?''**

''சாப்பாட்டு மெஸ்ஸில் போடும் மசால் வடையின் சைஸிலிருந்து செலக்ஷன் பரீட்சையில் போடும் மார்க்குகள் வரையில் எது வேண்டுமானாலும் காரணமாக இருக்கலாம். காரணத்தின் தகுதி, யோக்கியதை

★

ஆரம்பத்திலகண்ட செய்திகளிலிருந்து மாணவ உலகத்தின் இன்றைய மன நிலையை வெவ்வேறு கோணங்களி லிருந்து ஓரளவு புரிந்து கொள்ள முயற்சி செய்யலாம். அறிவுப் பெருக்கு என்ற ஒரே குறிக்கோளுடன் கல்லூரிக ளுக்குப் போகும் மாணவர்கள், ஏன் இந்தவிதமான ஆர்ப்பாட்டங்கள், கலாட் டாக்கள் முதலியவற்றில் தங்கள் கவ னத்தைச் செலுத்துகிறார்கள்? குழந் தைப் பருவத்துக்கும் இளமைப் பருவத் துக்கும் இடையே நிகழும் மெழுகுப் பருவத்தின் காரணமா? ஆங்கிலத்தில் 'அடோலஸெண்ட் ஸ்டேஜ்' என்று சொல்கிறார்களே! அதன் காரணமாகப் பல கண்டக்டருடன் கலாட்டா செய் தார்கள் என்று வாதாடலாம். ஆனால் அதே வாதம் அவர்கள் கல்லூரி நிர் வாகத்தின் ஒழுங்கு சட்டதிட்டங்களை மீற முன்வரும் போது உதவாதே! கல்லூரி களின் சட்ட திட்டங்களுக்கு உட்பட்டு அங்கு கல்வி கற்க வருவதாகத்தானே ஐதிகம். ஆகையால் ஏதோ புலப்படாத வெளி சக்தியும், புகை படர்ந்த தெளி வில்லாத மன நிலையும் இன்றைய மாணவர்களை அவர்கள் கவனம் முழு தும் கல்வியில் செல்லாது கலக்க, ஆட்டிவைக்கின்றன என்றுதான் நினைக் கத் தோன்றுகிறது. இந்த நிலையைப் பற்றி ஓரளவு விவரமாகத் தெரிந்து கொள்ளலாம் என்றுதான், மாணவர் உலகத்துடன் பலகாலமாக ஒட்டித் தொடர்பு கொண்டுள்ள விவேகானந்தா கல்லூரி முதல்வர் திரு ஜி. வேங்கட ராமன் அவர்களைப் பேட்டி கண்டோம்.

★





இவைகளைப் பற்றி அவர்கள் அவ்வளவாகக் கவலைப்படவில்லை. போராட்டம் நடத்த வேண்டும் என்ற ஒரு வெறி வரும்போது எந்த சின்னக் காரணத்தையும் பெரி தாகத் தோன்றும்படி செய்து விடு வார்கள். இந்த வெறிக்கு வயது மாத்திரம் காரணம் என்றுசொல்ல முடியாது. படிப்பில் ஈடுபாடு குறைவது ஒரு காரணம். சில சந்தர்ப்பங்களில் வெளியார் தலை யிடுவதும் மற்றொரு காரணம்!''

''இந்தப் பிரச்னைகளுக்குப் பெற் றோர்கள் பொறுப்பாளிகளா?''

''ஒருவகையில் பொறுப்பாளிகள் என்றுதான் நான் ஓங்கியே சொல் வேன். ஆனால் இதற்கு முன் இன் றைய கல்விச் சூழ்நிலையைக் கொஞ் சம் விவரமாகச் சொல்ல வேண் டும். பெரும்பாலான தகப்ப னர்கள் தங்கள் பிள்ளைகளுக்கு இடம் பிடிக்கும் சந்தர்ப்பங்களில் தான் பரபரப்பையும் ஆர்வத்தை யும் காட்டுகிறார்களே தவிர, அப் புறம் தேவையான அளவுக்குக் கண்டிப்பையும் கவனத்தையும் காட்டுவதில்லை. எப்படியாவது தன் பிள்ளை ஓர் என்ஜினீயராகவோ, டாக்டராகவோ வரவேண்டுமென்றுதான் எதிர்பார்க் கிறார்களே தவிர, அவன் அந்தத் துறையில் திறமை பெறப் போதிய கவனம் காட்டுகிறானா என்று அக்கறை எடுத்துக் கொள்வதில்லை. அதாவது பட்டம்தான் முக் கியமே தவிர, அதை எட்டும் பாதை எப்படியிருந்தால் என்ன என்று அலட்சியமாக இருந்துவிடுகிறார்கள். கல்விச் சலுகைகளை வழங்குவதில் இப்போது தாராளம் அதிகமாகவே இருக்கிறது. படிப்பில் அக்கறை காட் டாதவர்கள் வருட இறுதிப் பரீட்சையில் போதிய மார்க்குகள் வாங்காமல் அதே வகுப்பில் மீண்டும் இருக்க நேர்ந்தாலும் இந்தச் சலுகை தொடர்கிறது. இதனால் 'யார் நம்மை என்ன செய்துவிட முடியும்?'

என்ற மனப்பான்மை பிறந்து விடுகிறது. இந்த மனப்பான்மைதான் அந்த மாணவனை ஒரு 'ஸ்டிரைக் நாயக'னாக ஆகும் அளவுக்குத் தள்ளுகிறது. கையில் பணம் இருக்கிறது. கத்தத் தொண்டை இருக்கிறது. பின்னால் நாலுபேர்கள் சேர்வதில் வியப்பு ஒன்றுமில்லை.

''அநேகமாக இந்த மாதிரிப் போராட்டச் சம்பவங்கள் ஒவ்வோர் ஆண்டிலும் கடைசி 'டேர்ம்'லேதான் ஆரம்பிக்கும். இவைகளில் யார் முக்கியத்துவம் வகிக்கிறார்கள் என்று கூர்ந்து கவனித்தால் முதல் வருஷப் பையன் அல்லது செலக்ஷன் கிடைக்காத வீரர்கள் தான் இரண்டொருவர் இருப்பார்கள். அவர்களுக்கு உடனடியாகப் பரீட்சை எழுத வேண்டிய அவசியம் இருக்காது. வருட முடிவில் கல்விச் சலுகை மூலம் கிடைத்த பணம் இருக்கும். 'வழக்கமாகக் கிழக்குப் பக்கம் பார்த்து நிற்கும் பேராசிரியர் இன்று மேற்கு பார்த்து நின்றாரா?....தொடங்கு ஸ்டிரைக்', 'இன்றைக்குச் சாப்பாட்டு விடுதியில் இலை கொஞ்சம் சிறிதாக இருந்ததா? ஆரம்பி உண்ணாவிரதத்தை!' என்ற கோஷம் எதிர்பாராமல் கிளம்பும். மாணவப் பிரதிநிதி மணிகள் வணங்காமுடி மணிகளாகப் பேரம் பேச வருவார்கள்! இதெல்லாம் இப்போது ரொம்ப சகஜமாகப் போச்சு. எந்தப் பிரச்னையையும் சுலபமாக முடிவு கட்டுவதில் அவர்களுக்கு ஆர்வம் இல்லை. பத்திரிகைகளில் அடிபடும் வரையில் அந்தப் பிரச்னைகள் முற்ற வேண்டும் என்பதுதான் அவர்களின் ஆழ்ந்த விருப்பம்.''

**''மாணவர்கள் இப்போதெல்லாம் உண்ணாவிரதம் என்ற ஆயுதத்தை அடிக்கடி கையாளுகிறார்களே! அதைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?''**

''அதை நினைத்துப்பார்த்தால் வேதனையாக இருக்கு! மகாத்மா காந்தி, ஆத்மசுத்திக்காகக் கையாண்ட இந்தப் புனித சாதனத்தை இன்றைய மாணவர்கள் வெகு அலட்சியமாகத் தங்கள் ஆத்திர சக்திக்காகப் பயன்படுத்துகிறோம் என்று பயமுறுத்துகிறார்களே! இது பிஞ்சிலே பழுத்த அரசியல் ஸ்டண்ட் என்று சொன்னால் அவர்களுக்கு எங்கே புரியப் போகிறது?

''என் நண்பராகிய மற்றொரு கல்லூரி முதல்வர் சுவாரசியமான ஒரு செய்தி சொன்னார். அவர் கல்லூரியில் திடீரென்று சிலர் இந்த உண்ணாவிரத வித்தையை ஆரம்பித்தார்களாம்! ஆரம்பித்த இரண்டாவது மணியிலே ஒரு மாணவனுக்கு மயக்கம் போட்டு விட்டது. முதல்வர் பரபரப்புடன் அந்தப் பையனின் பெற்றோர்களுக்குத் தகவல் அனுப்பினார். அந்தத் தகப்பனார் கல்லூரிப் பக்கம் திரும்பிப் பார்க்கவேயில்லை. பொறுப்புள்ள தகப்பனாராக இருந்திருந்தால் உடனே கல்லூரிக்கு வந்து தம் பையனைக் கரகர வென்று வீட்டுக்கு இழுத்துக் கொண்டுபோய் என்ன செய்திருப்பார் தெரியுமா? நிஜமாகவே அவனை ஓர் அறைக்குள் அடைத்து இரண்டு நாளைக்குச் சோற்றைக் கண்ணில் காட்டாமல் இருந்திருப்பார். அப்போது தானே அவனுக்கு நிஜமான உண்ணாவிரதத்தின் மதிப்புத் தெரியும்! இல்லாவிடில் அவன் இரண்டாவது மணிப் பட்டினியில் மயக்கம் வந்ததாக நடித்திருப்பானா?''

**''ஆசிரியர்கள் மாணவர்கள் உறவு சுமுகமாக இருந்தால் போராட்டங்கள் ஓரளவு குறையுமா?''**

''ஆசிரியர்களைப் பற்றி யார் கவலைப்படுகிறார்கள்!...... இப்போதெல்லாம் ஆசிரியர்கள் பதவியை விரும்பி வருபவர்கள் வெகு குறைவு. வந்திருக்கும் சிலரும் எப்போது வேறு நல்ல உத்தியோகம் கிடைத்து இதை உதறிவிட்டுப் போகலாம் என்று காத்திருக்கிறார்கள். 'கல்வி தானம்' என்ற பணியைக் குறிக்கோளாகக் கொண்டு வாழும் சிலர் தான் இதில் ஒட்டிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களும் ஒருவித பதைபதைப்புடன்தான் தினசரிப் பணியைச் செய்கிறார்கள். எந்த நிமிடத்தில் எந்த வகுப்பில் கலாட்டா, போராட்டம் தொடங்குமோ என்று அஞ்சிக் கொண்டே இருக்கும் நிர்ப்பந்தம் ஏற்படுகிறது. என்னைக் கேட்டால் இனிமேல் கல்லூரி ஆசிரியர்களைப் பொறுக்கும் போது போலீஸ் அதிகாரிகளைப் பொறுக்கும் உடல் வளம், உயரம், கன முறைகளைக் கையாளலாம். ஒருவேளை அத்தகைய தோற்றமாவது மாணவர்கள் மனத்தில் ஒருவகை அச்சத்தைத் தோற்றுவிக்கும். இப்போது உள்ள பல ஆசிரியர்கள் மாணவர்களைவிடச் சிறியவர்களாக இருக்கிறார்கள்!

''கல்வி கற்றுக் கொள்ள எவ்வளவு சிரத்தை வேண்டுமோ, அத்தனை மதிப்பு அந்தக் கல்வியை அளிக்கும் ஆசிரியர்களிடமும் இருக்க வேண்டும். இந்தச் சிரத்தையும் பக்தியும் சீரான கல்வி அபிவிருத்திக்கு அவசியம். தங்கள் பிள்ளைகளிடம் இந்த இரண்டு குணங்களும் இருக்கின்றனவா என்று பார்த்துக் கொள்வது பெற்றோர்களின் கடமை. இந்தச் சூழ்நிலை தோன்றி விட்டால் மாணவர்கள் மாணவர்களாக இருப்பார்கள். வெளி சக்திகளின் வலையில் விழுந்து தங்கள் வாழ்க்கையின் லட்சியத்தைப் பாழாக்கிக் கொள்ள மாட்டார்கள்!

ஃ ஃ ஃ

''இந்தச் சந்தர்ப்பத்தில் டில்லி சர்வகலாசாலையைச் சேர்ந்த நான்கு மாணவர்கள், காட்டிய வீரம் பற்றிய செய்தி ஒன்று மனத்துக்கு ஆறுதல் தரக் கூடியதாக இருக்கிறது. ஒரு கம்பெனிக் காஷியரை வழி மடக்கி அவரைக் கத்தியால் குத்திவிட்டு முப்பத்திரண்டாயிரம் ரூபாயுடன் ஓடிய இரண்டு முரடர்களை அந்த மாணவர்கள் துரத்திப் பிடித்துப் போலீஸில் ஒப்படைத்தார்களாம். அற்புதமான, பாராட்டப்பட வேண்டிய சமூக சேவை! இந்த மாதிரி மனப்பான்மையே மாணவர்கள் உள்ளங்களில் அதிகம் வளரலாமே! சமூக விரோத சக்திகளுடன் அவர்கள் ஏன் கைகோத்துப் போக வேண்டும்?''

—மேனு

"ஒரு
அழகு வாய்ந்த
வஸ்து
எக்காலத்திலும்
ஆனந்தம் தரும்."

ஒரு புதிய இடத்திற்கு விஜயம் செய்வது எப்பொழுதுமே விசேஷமாயிருக்கும். மற்றும் ஹரகோபா எம்ப்ராய்டரி வேலைப்பாடு அமைந்த துணி பொருள் அலங்கரித்துக் கொள்வதிலும் உங்களுடைய கன்னிய தோற்றத்திற்கு ஒரு அமைதி அழகும் வருகிறது — ஒரு அபாரமான அமைப்புக்கு இசைந்திருக்கிற வேறுபதி.

# ஹரகோபா

எம்ப்ராய்டரி வேலைப்பாடு
அமைந்த துணிகள்



பான்லி கார்ப்பரேஷன் லிமிடட்,
(ஹரகோபா மில்கள் மற்றும் எம்ப்ராய்டரி வேலைப்பாடு அமைந்த துணிமணிகள் உற்பத்தியாளர்கள்) 10, அபோலோ தெரு, பம்பாய்-1

RB/FC/TAM/116

'அந்த
அதிகரித்த
வெண்மை
எங்கிருந்து
வருகிறது?'

Tinopal

# டினோபால் வெண்மை பளிச்சிடச் செய்வதில் இணையற்றது.

துவைத்த துணிகளைக் கடைசியாக அலசுவதற்கு முன், தண்ணீரில் சிறிதளவு டினோபால் சேர்த்துப் பாருங்கள், உங்கள் வெள்ளைத் துணிகளெல்லாம் எப்படி மேலும் வெண்மை பளிச்சிடுகின்றன! சட்டைகள், புடவைகள், டவல்கள், விரிப்புகள் எல்லாம் எப்படி அதிகரித்த வெண்மை துலங்க விளங்குகின்றன!

இந்த அதிகரித்த வெண்மைக்கு ஆகும் செலவுதான் என்ன? துணி ஒன்றுக்கு ஒரு பைசாவுக்கும் குறைவுதான்! கால் தேக்கரண்டி அளவு டினோபால் ஒரு வாளித் துணிகளை வெண்மை பளிச்சிடச் செய்கிறது.

விஞ்ஞான ரீதியாகத் தயாரிக்கப்பட்ட டினோபாலை எப்பொழுதும் உபயோகியுங்கள். அதனால் துணிகளுக்கு ஒருவிதமான கெடுதலும் ஏற்படுவதில்லை.





டினோபால் இப்பொழுது ஸீல் செய்யப்பட்ட அலுமினிய ரேக்குப் பேக்கெட்டுகளிலும் கிடைக்கிறது. ஒரு பேக்கெட் டினோபால் ஒரு வாளித் துணிகளை வெண்மை பளிச்சிடச் செய் கிறது– சிறிதும் வீணாவதில்லை, உபயோகிக்கச் சுலபமானது, தொந்தரவற்றது.




டினோபால், ஜே.ஆர்.கெய்கி, எஸ் ஏ.பாஸ்., ஸ்விட்ஸர்லாந்து அவர்களின் பதிவுபெற்ற வியாபாரச் சின்னமாகும்.

சுஹ்ரித் கெய்கி லிட், த.பெ. 965, பம்பாய் 1 பிஆர்.

Shilpi SG 223 A Tam

# இரண்டு அற்புதங்கள்

கோமதிசுவாமிநாதன்

ஆனால் அவர் அந்த இடத்தை நெருங்கு முன்பு அந்த நீக்ரோ வெளியேறி விட்டான்.

அந்த மேற்பார்வையாளர் குறிப்பிட்ட அடையாளங்களைக் கொண்டு பிரௌன் என்னும் நீக்ரோ ரயில்வே ஊழியனைப் போலீஸார் கைது செய்தார்கள். நிறம், குரல், உயரம் எல்லாம் அந்த மேற்பார்வையாளரின் வருணனைக்கு ஒத்திருந்தன. ஆனால் அந்த பிரௌனோ தான் அன்று காலை போலீஸ் லாக்கப் சமீபத்தில் கூட வரவில்லை என்றும் அங்கே கிராபோர்டு என்பவன் அடைக்கப்பட்டிருந்தான் என்பதே தனக்குத் தெரியாது என்றும் அழுத்தமாகச் சொன்னான். ஆனால் அவனை யாரும் நம்பத் தயாரில்லை. அதற்குப் பதிலாகப் பல வலுவான சந்தர்ப்பச் சாட்சியங்கள் அவனுக்கு எதிராக முளைக்கத் தொடங்கின. அதற்கு வேறு மூன்று நபர்கள் வெகுவாக உதவினார்கள்.

ரயில் கண்டக்டர் விபிரான் என்பவன், ஆகஸ்ட் மாதத்தில் பிரௌன் சிறைச்சாலையில் அவன் அறையில் கூட இருந்த மிட்சல் என்பவனிடம் தான்தான் அந்தக் கொலையைச் செய்ததாக ஒப்புக் கொண்டானும். மிட்சல் இந்த மாதிரி சாட்சி சொன்னான். பிரௌன் இதை ஆவேசத்துடன் மறுத்தான். ஆனால் பலன் ஒன்றும் ஏற்படவில்லை.

வழக்கை விசாரித்த நீதிபதி சந்தர்ப்பச் சாட்சியங்கள் வலுவாக இருப்பதை மனத்தான். இந்தச் செய்தியின் அடிப்படையில் போலீஸார் மீண்டும் விசாரணை தொடங்கியபோது தான், பிரௌன் என்னும் நிரபராதி சந்தர்ப்பச் சாட்சியங்களின் அடிப்படையில் இந்த விவகாரத்தில் சிக்கிக் கொண்டான் என்று புரிந்து கொண்டார்கள். உடனடியாக பிரௌன் வாழ்க்கையில் இரண்டாவது அற்புதமும் நிகழ்ந்தது. பன்னிரண்டு வருடங்கள் சிறையில் இருந்ததற்கான நஷ்ட ஈட்டுத் தொகையைக் கொடுத்து அவனை விடுதலை செய்தார்கள்.



அவன் தன் வாழ்க்கையில் நடந்த அத்தனை துர்ப்பாக்கிய சம்பவங்களையும் மறந்துவிட்டான். ஆனால் தவறுதலாகத் தண்டனை உத்தரவை டைப் செய்த குமாஸ்தாவை மாத்திரம் நினைத்து நினைத்துப் போற்றினான். அவன் மாத்திரம் அந்தத் தவற்றைச் செய்யாமல் இருந்திருந்தால், அவன் தலை தான் அன்று தப்பி யிருக்குமா? அல்லது இன்று கிடைத்த எதிர்பாராத விடுதலை இன்பத்தைத் தான் அனுபவித்திருக்க முடியுமா?

ஆதாரம்: காரனெட்

வெள்ளை

# டெட்

சலவையின் மேன்மை
வெண்மையுடன் தூய்மை




வெள்ளை டெட் பவுடரினுல் மட்டும்தான் உங்கள் வெள்ளைத் துணிகளை பளிச்சிடும் வெண்மையுடனும் வண்ண நிறத் துணிகளை துப்புரவாகவும் வெளுக்க முடியும். நவீன டெட் ஒன்றுதான் துணிகள் பாழாகாமல் சலவை செய்ய உதவுகிறது.

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிட் பம்பாய்

Shilpi SOM 28 Tam

# விருது பெற்றவர்கள்



1



3



2



4



5

இந்திய சர்க்கார் குடியரசு தினத்தன்று விருது வழங்கிக் கௌரவித்தவர்களில் சிலரது படங்களை இங்கே மகிழ்ச்சியுடன் வெளியிடுகிறோம். —ஆசிரியர்

1. பத்மபூஷன் ஸ்ரீ டி. எஸ். ராமசாமி ஐயர்
2. பத்மபூஷன் டாக்டர் விக்ரம் அம்பலால் சாராபாய்
3. பத்மஸ்ரீ ச. கிருஷ்ணய்யர்
4. பத்மஸ்ரீ சிவாஜி கணேசன்
5. பத்மஸ்ரீ பானுமதி




முதல் பரிசு ரூ. 30
**லட்சுமி ரமணன்**
**C/O டி.வி. ரமணன், ஐ. ஏ. எஸ்.**
(கலெக்டர்)
பார்மர், ராஜஸ்தான்

## தோசைக் கொலை!

ருசியுள்ள உணவைப் பக்குவமாகச் சமைப்பது ஒரு கலை. ஆயின் நெடுநாள் வரை 'குழம்பில் உப்பில்லை, ரசத்தில் காரமில்லை' என்று நொட்டு நொள்ளை சொல்லத்தான் எனக்குத் தெரிந்திருந்ததே தவிர எனக்கும் சமையலுக்கும் வியன்னாவுக்கும் விரிஞ்சிபுரத்துக்கும் உள்ள தூரமாக இருந்தது.

ஆயினும் திருமணமாகி ராஜஸ்தானுக்கு வந்த பொழுது நான் சமையல் கற்றுக் கொள்ளாதது எத்தனை பெரும் தவறு என்பதை உணர்ந்தேன். என் கணவருக்கு 'போஸ்டிங்' கிடைத்த ஊரில் ஹோட்டல் என்ற நாமதேயம் கூட இல்லை.

முதலில் பரிமாறக் கற்றுக் கொண்டேன். முதல் நாள் உப்பு ஜாடியை என் கணவர் முன் போட்டு உடைத்த பொழுது அவர் வாளாவிருந்து விட்டார். அடுத்து அன்னம் எடுக்கையில் வெண்கலப்பானை கீழே விழுந்து இரண்டான பொழுது என் மைத்துனர் ''என்ன, மன்னி! வந்ததுமே பாகப் பிரிவினை தொடங்கிவிட்டீர்களே!'' என்றார் குறும்பாக. எனக்கு எப்படியோ ஆகிவிட்டது. என் பரிசோதனைகளை ஒரு 'சமையல் வழி காட்டி'யுடன் தொடங்கினேன். துவையல் பச்சடியைப் போலவும், ரசம் குழம்பைப் போலவும் இருந்ததென்பதைக் கூறத் தேவையில்லை.

என் திறமை மீது கொஞ்சம் நம்பிக்கை பிறந்ததுமே, ஒரு நாள் மாலை என் கணவர் தன் நண்பர்கள் குடும்பத்தார் சிலரைச் சிற்றுண்டிக்கு அழைத்துவிட்டார். அன்று நான் முயன்ற பரிசோதனை ரவாதோசையும், தேங்காய் பர்பியும். பின்னதைப் பதம் தெரியாமல் இறக்கி விட்டு அது கொழ கொழவென்று ஆகிவிட்டது. அதற்கு 'கோகனட் ஹல்வா' என்று நாமகரணம் செய்து பரிமாறி விடத் தீர்மானித்தேன். அதுதான் அப்படி என்றால் ரவாதோசை கல்லுடன் நேசம் கொண்டாடிக் கொண்டு வர மறுத்தது! அழைக்கப்பட்டவர்கள் அனைவரும் வந்து விட்டனர். முதல் தோசையுடன் அரைமணி மன்றாடிவிட்டு அதைத் துண்டம் துண்டமாக வெட்டி ஆபரேஷன் செய்வது போல் சுரண்டி எடுத்தேன். இரண்டாவது சுரண்டவும் வரவில்லை. கையைப் பிசைந்தேன். என் முகத்திலிருந்த கலவரத்தைக் கண்ட நண்பர் ஒருவரின் மனைவி என்னவென்று விசாரித்தாள். விஷயத்தை அவரிடம் கூறினேன். பெரிதாகச் சிரித்துவிட்டு எனக்கு உதவ முன் வந்தாள். அவள் அனாயாசமாக அவ்வளவு தோசைகளையும் வார்த்து எடுத்து வைத்ததைக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டு நின்றேன்.

இப்பொழுது அப்படியில்லை.... நன்றாகச் சமையல் கற்றுக் கொண்டு விட்டேன். சந்தேகமிருந்தால் வந்து பாருங்களேன். ஐயயோ... ஏன் ஓடுகிறீர்கள்!

லட்சுமி ரமணன்

## ஹீல் ஷூ

''ஐயோ கஷ்டம், உனக்குச் சாதாரண செருப்பு போட்டுக் கொண்டே நடக்கத் தெரியாதே. இந்த லட்சணத்தில் ஹீல் ஷூ வேறயா?''

'' உங்களுக்கென்ன? நான்தானே போட்டுக் கொள்ளப் போகிறேன்.''

'' சரி, சரி உன் பாடு!''

முதன் முதலாக நானும் என் கணவரும் பம்பாய் சுற்றிப் பார்த்துவரக் கிளம்பிக் கொண்டிருந்தோம். முதல் முறையாக நான் மதுரையைத் தாண்டி அயலூர் பயணம்.

பம்பாய் மெயிலில் ஏறியவுடன் நாங்கள் இருந்த பெட்டியில் வேறு ஆட்கள் இல்லாததால் அட்டைப் பெட்டியைப் பிரித்து என் கணவரின் உதவியுடன் குதி செருப்பை மாட்டிக் கொண்டேன். வண்டி கிளம்பியதும் வண்டிக்குள்ளேயே மேலும் கீழும் நடை ஒத்திகை ஆரம்பமாயிற்று. வண்டியின் ஆட்டம் வேறு. என் கணவரின் தோளைப் பிடித்துக் கொண்டும் கூட எனக்கு நடப்பதற்குக் கஷ்டமாக இருந்தது. இருந்தாலும் மெள்ள மெள்ள நடந்து பார்த்துக் கொண்டிருந்தேன். ஒவ்வொரு தடவையும் என் கணவர் பிரமாதம், பிரமாதம் என்று





**இரண்டாவது பரிசு ரூ. 20**

**பத்மா ரங்கசாமி, c/o ரங்கசாமி**
ஏ. எஸ். எம். தென்னிந்திய ரயில்வே
நாட்டரசன்கோட்டை

கேலி பண்ணிக் கொண்டிருந்தார். அதற்குள் வண்டி அரக்கோணம் வந்து விட்டது. எங்கள் பெட்டியில் கூட்டம் வந்து விட்டபடியால் மேற்கொண்டு ஒத்திகை தள்ளிப் போடப்பட்டது.

மறு நாள் காலை பம்பாய் வி. டி. ஸ்டேஷனுக்குள் வண்டி நுழைந்தது. குதி செருப்பைக் கழற்றாமல் காலிலேயே போட்டுக் கொண்டிருந்ததால் காலில் செருப்புத்தோல் கடித்துக் கால் ஊன்ற முடியவில்லை. இந்தக் கோலத்துடன் என் கணவரின் தோளைப் பிடித்துக் கொண்டு கீழே இறங்கினேன். போர்ட்டரிடம் சாமான்களைக் கொடுத்துவிட்டு அவன் பின்னால் இருவரும் வேகமாகத் தொடர வேண்டியிருந்தது. கூட்டமும் அதிகம். ஒருவாறாகப் பிளாட்பாரத்துக்கு வெளியில் வந்து டாக்ஸியில் ஏறினோம்.

என் கணவர் ரகசியமாக, ''எப்படி இவ்வளவு தூரம் வேகமாக நடந்து வந்தாய்!'' என்று கேட்டார். உடனே நான் என்னுடைய கைப் பையைத் திறந்து காண்பித்தேன். ஒரு ஜதை 'ஹீல் ஷூ' அதில் திணித்து வைக்கப்பட்டிருந்ததைப் பார்த்ததும் சிரித்தாரே பார்ப்போம்! அந்த ஷூ இன்றும் என் வீட்டு அலமாரியில் பம்பாய் ஞாபகார்த்தமாகக் காட்சி அளிக்கிறது.

—பத்மா ரங்கசாமி

## மிஷின் பட்டபாடு!

''**நீ** நிச்சயம் தமிழ் டைப்ரைட்டிங் பரீட்சையில் கோட் அடிப்பாய்!'' – இப்படித்தான் எல்லோரும் சொன்னார்கள்.

ஒரு நாள் என் நண்பன் ஒருவன் ஒரு லெட்டரைக் கொடுத்து இறுதியாக ஒரு வாக்கியத்தைச் சேர்க்கச் சொன்னான். ''மறக்காமல் சாவியை வாங்கி அனுப்பவும்'' என்பதே அவ்வாக்கியம்.

''நீ சாமியாரானது எப்போது?''

பிறகுதான் என் தவறு தெரிந்தது. நான் சாவி என்று அடிப்பதற்குப் பதிலாகக் காவி என்று அடித்து விட்டிருக்கிறேன்.

ஒருவர் என்னிடம் கவரைக் கொடுத்து விலாசம் அடிக்கச் சொன்னார். 'திரு கா. மோதிரம் பிள்ளை, குண்டக்கல்.'

பிறகு, ''என்ன தம்பி, கவரை 'வேஸ்ட்' பண்ணி விட்டாயே? எனக்கு அடிக்கத் தெரியாது என்று முன்னாலேயே சொல்லி இருக்கக் கூடாது?'' என்றார்.

கா தரு மோதிரம் பின்ளே.... கண்டக்கல்' என்று நான் டைப் அடித்துக் கொடுத்தால் அவர் வேறென்ன சொல்வார்?

ரிசல்ட் வந்தது. ஆச்சரியம் என்னவென்றால் ஆங்கில டைப்ரைட்டிங்கில் நான் கோட். தமிழ் டைப்ரைட்டிங்கில் நான் பாஸ்!

—முகவை இராஜா

## '' மியாவ்லின் ''

**ஆ**ரம்பத்தில் கவனமாக வயலினை இசைக்கும் பொருட்டுத் தலை குனிந்து வாசிக்கின்றோம். இக்காரணத்தால் நாம் வாசிப்பதை (கட்டாயமாக) கேட்க நேரிடும் நம் குடும்பத்தினரின் அதிருப்தி நிறைந்த முகபாவத்தையும், காதைப் பொத்திக் கொள்ளும் அநியாயத்தையும் பாராமல் தவிர்க்கலாம்.

ஒருநாள் என் தாயார் ''நீ தனியே ஓர் அறையில் வயலின் வாசி. இதனால் நெடு நேரம் அமைதியாய்ப் பயிற்சி செய்யலாம்'' எனக்கூறி, என்னை வீட்டின் பொது அறையினின்று தனி அறைக்கு மாற்றல் செய்தார். இது குடும்பத்தினர் அனைவரும் சேர்ந்து செய்த சதி! காரணம்? என் வாசிப்பிலிருந்து தப்பிக்கலாமே என்ற சுயநலந்தான்.

ஒருநாள் நான் என் அறையின் கதவை மூடிக் கொண்டு என் வாத்திய இசையில் மூழ்கிக் கிடக்கத் திடீரென ஓர் எலி பீரோவின் பின்னிருந்து ஓடியது. அறைக் கதவு மூடியிருந்ததால் மிரண்ட எலி என்னை நோக்கி வர, நான் வயலினைக் கீழே போட்டுவிட்டு நாற்காலியின்மீது நின்று கொண்டு கூச்சலிட்டேன். வெளியிலிருந்து துணை வருவதாய்க் காணோம். அவர்களைச் சொல்லிக் குற்றமில்லை. நான் வாசிக்கும் பல அபஸ்வரங்களில் என்னுடைய ''கீறீச்''சென்ற அலறலும் ஒன்றென எண்ணிவிட்டார்கள் போலும். ஐந்து நிமிட முயற்சிக்குப்பின் எலியிடமிருந்து தப்பி, கலங்கிய முகமும் கண்ணீருமாக அறையினின்று வெளி வந்தேன். ஏற்கனவே என்னைக் கண்டால் ''மியாவ், மியாவ்'' என்று கூவும் வானரப்படைகளின் கண்ணில் பட்டு என் அழுகைக்குக் காரணமான சோக சரிதையைக் கூற விரும்பவில்லை. வெறும் வாயை மெல்பவர்களுக்கு அவல் வேறு வேண்டுமா? எனவே இரகசியமாக அழுதேன். ஏன் தெரியுமா? என் வயலினிசையை எலி கூட எதிர்க்கின்றதே என்றுதான்!

—மிஸ். வத்ஸலா ராதாகிருஷ்ணன்

## காய்கறித் தோட்டம்

**நா**ன் காய்கறித் தோட்டம் போட முனைந்ததற்கு மூன்று காரணங்கள்:

1. வீட்டுக்கு முன்னால் இருந்த காலி மனை. 2. பாதி விலையில் காய்கறி விதைகள் தருவதாகக் கூறிய பத்திரிகை விளம்பரம். 3. நாட்டுக்காக நீங்கள் சாதித்தது



என்ன?' என்று மேடை ஏறிப் பேசுவோருக்குச் சரியான பதிலாக அமையும் என்ற எண்ணம்.

முடிவுக்கு வருவதில் நிதானமே தவிர, காரியத்தில் அசுர வேகந்தான்.

ஒரு மணி நேர உழைப்பில் தகர்ந்து விட்டது — பூமி அல்ல; பூமிக்கு அடியில் மண் இருக்கும் என்ற என் நம்பிக்கை. காரையும் சுண்ணும்பும் செங்கல்லுமாக இருந்தது. வீடு கட்டியதன் அடையாளமாம்!

சளைப்பேனு? நாலு நாள் விடாமுயற்சியில் பூமியைக் கிளறி மண்ணுக்கினேன்.

கீழ்ப்பாக்கத்தில் நீர்த் தேக்க நிலையத்துக்கு அருகில் நான் குடியிருந்தபடியால், அருவி போலக் கொட்டும் தண்ணீரை, வீட்டுக்குள்ளேயிருந்து நாற்பதடி இடைவெளியைத் தாண்டி நிலத்துக்குக் கொண்டு வருவதில், முதல் நாள், குழந்தைகளும் பக்கெட்டுகளும் குடங்களும் உதவின. மறு நாள் 'பரீட்சை' என்ற பெயரில் குழந்தைகள் மறுத்து விட்டன. இருபது ரூபாய்க்கு வாங்கிய ரப்பர் டியூப், ஒரே வாரத்தில் பல துண்டுகளாகப் பெருகி 'உங்கள் தலையில் இந்தப் பழசைக் கட்டக் கடைக்காரன் காத்திருந்தானு?' என்று வீட்டாரின் வசையைத் தேடிக் கொடுத்தது!

பாதி விலைக்கு வாங்கின விதைகள் இரு வகை என்பது, விதைத்த பிறகே தெரிய வந்தது: அதாவது முளைப்பது, முளைக்காதது!

போட்ட வகைகளுக்கு ஒன்றும் குறைவில்லை. கீரை, முள்ளங்கி, தனியா, வெண்டை, கத்திரி, அவரை, பூசனி, பாகல், புடலை.

'ஆடிப் பட்டம் தேடி விதை' என்ற மூத்தோர் வாக்கை மீறி, ஆவணிக் கடைசியில் விதைத்ததனுலோ என்னவோ சில விதைகள் முளை விடவில்லை.

கொத்தமல்லி விதையை வெய்யிலில் காய வைத்துச் செருப்பால் தேய்த்து, விதையை இரண்டாக்கி மண்ணுேடு கலந்து தூவ வேண்டுமாம்: முதலில் எனக்குத் தெரியாது.

பூசனி பறங்கியைப் படரவிட்ட கடவுள் ஏன் அவரையையும் தரையில் படரவிட்டிருக்கக் கூடாது? இப்போது இருக்கிற அகவிலையில் அவரைக்குப் பந்தல் போடக் கூட வசதியில்லாத மத்திய வகுப்புக் குடும்பியின் நிலையை இறைவன் முன்கூட்டி எண்ணிப் பார்த்திருக்க வேண்டாமா ?

பச்சென்று வளர்ந்த கீரையும், பச்சை மிளகாயும் முள்ளங்கியும் ஒரு நாள் கொத்திக் கிளறப்பட்டு ரணகளம் போல் பாழாகிக் கிடந்ததைக் கண்ணுற்ற போது, வீட்டுக்கு இருமருங்கிலும் வளமாயிருந்த கோழிப் பண்ணைகள் நினைவுக்கு வந்தன.

பிஞ்சு விட்டிருந்த வெண்டை கத்திரிச் செடிகள் ஒரு நாள் வாடிக் கிடந்ததைப் பார்த்ததும், திறந்த கேட் வழியாக நுழைந்த தோட்டத்து முதல் சத்துரு ஆடு என்பதை உணர்ந்தேன்.

பந்தலில் படர்ந்த அவரை திடீரென்று ஒரு நாள் படை படையாய் வந்த அசுகுக் கூட்டம் மேகம் போல் கப்பிக் கொண்டதில் மேனி அழிய, மறு நாளிரவு அடித்த பேய்க் காற்றில், பந்தல் சரிந்து விழுந்து விட்டது!

''கிச்சன்கார்டன் போட்டு நாட்டில் உணவுப் பஞ்சத்தைத் தீர்த்துவிட முடியாது!''

—மரகதம் நாராயணன்

## ''முதல் முயற்சி''

சைக்கிளில் ஏறி விடுவேன். மறு நிமிடம் மெயில் வேகத்தில் சைக்கிள் பறக்கும். ஆனுல் நிறுத்துவதற்கு எங்கு கட்டைச் சுவர், எங்கு மதகு இருக்கிறது என்று பார்க்க வேண்டியதுதான்.

இந்த உண்மை தெரியாத என் அப்பா, ஒரு நாள் வீட்டுக்கு விருந்தினர் வந்திருந்த போது என்னை அழைத்து, 'சைக்கிளை எடுத்துச் சென்று இரண்டு மசால் தோசை பார்சல் சீக்கிரம் வாங்கி வா' என்று உத்தரவிட்டார். உடனே சைக்கிளை எடுத்துக் கொண்டு ஹோட்டலை நோக்கி விரைந்தேன். காற்று வேகத்தில் சைக்கிள் பறந்தது. அதை எப்படி நிறுத்துவது? எங்கு நிறுத்துவது? ஹோட்டலைச் சுற்றிச் சுற்றி இரண்டு முறை வந்து விட்டேன். சைக்கிளை நிறுத்துவதற்கு ஹோட்டலின் அருகில் கட்டைச் சுவர் கிடையாது.

ஒரு விநாடி சிந்தித்தேன். மின்னல் போல் ஒரு வழி தோன்றிற்று. சைக்கிளில் இருந்தபடியே, ''ராம ஐயர்! இரண்டு மசால் தோசை பார்சல்'' என்று கத்திக் கொண்டே ஹோட்டலைச் சுற்றி ஒரு முறை வந்து விட்டேன். ராம ஐயர் சுற்றிலும் ஒரு கண்ணோட்டம் விட்டு விட்டு உள்ளே சென்று விட்டார். மறு முறை ஹோட்டல் வாசலை அடைந்தேன். மீண்டும் ஒரு முறை ''ராம ஐயர்! இரண்டு மசால் தோசை பார்சல்'' என்று கத்தினேன்.

இந்த முறையும் ராம ஐயர் வெளியில் வந்து பார்த்தார். அதற்குள் நான் அந்தத் தெருவின் முடிவை அடைந்து விட்டிருந்தேன். ராம ஐயர் மிக்க ராம பக்தி உள்ளவர். அவருக்கு உடனே சந்தேகம் எழுந்தது. 'இது என்ன அசரீரி வருகிறது?' என்று எண்ணி உள்ளே சென்றுர். ராமர் படத்தின் முன் மசால் தோசையை வைத்துக் 'கிண், கிணி' என்று மணி அடித்தார்.

அச் சமயம் அடுத்த முறை நான் ஹோட்டலை அடைந்தேன். ''ராம ஐயர்! இரண்டு மசால் தோசை'' என்று சத்தம் போட்டேன். ராம ஐயர் வெளியே ஓடி வந்தவர் என்னைக் கண்டு என் நிலைமையைப் புரிந்து கொண்டார். ஓடி வந்து எனது சைக்கிளை நிறுத்த உதவினுர். இரண்டு தோசை பார்சல்களை எடுத்துக்கொண்டு ஓட்டமும் நடையுமாகச் சைக்கிளைத் தள்ளிக் கொண்டு வீட்டை அடைந்தேன்!

— ஸ்ரீமதி பூம்பாவை வேணுகோபாலன்

# வசீகரத்தையும், பெருமிதத்தையும் கொடுக்கும் நறுமணம் உங்களுக்கு பாமாலிவ் லவண்டர் டால்க் உபயோகிப்பதால்.

**உங்களுக்கு மிகவும் பிடித்தமான ஸெண்டுகள்—உங்களுக்காகவே மீண்டும் உருவாக்கப்பட்டிருக்கின்றன!**

ஒரு காலத்தில் உலக அழகுக் கேந்திரங்களிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டவையும், உங்களுக்கு மிகவும் பிடித்தமானவையுமான ஸெண்டுகளின்றி இனி நீங்கள் தவிக்கவேண்டாம்...இன்று பாமாலிவ் லவண்டர் டால்க் மட்டுமே அளிக்கும் வசீகர நறுமணத்தினாலும், பெருமிதத்தினாலும் உங்கள் உடலைச் சொகுசாகப் பராமரிக்க முடியும். பாமாலிவ் லவண்டரை உங்கள் உடம்பு முழுவதும் தூவிக்கொண்டு, சூழ்ந்து நிற்கும் அதன் இனிய வசீகர நறுமணத்தினால் களிப்படையுங்கள்.

**எப்பொழுதும் புத்துணர்ச்சியுடனும் நறுமணம் சூழ்ந்த அழகுடனுமிருக்க பாமாலிவ் லவண்டர் டால்க்.**

புதிய, நவீன காஸ்மெடிக் டின்!







மற்றும் பாமாலிவ் டால்க் டீலக்ஸ்
மயக்கும் 17 ஸெண்டுகளின் அற்புதமான

PT.O.S TAM

# ரேகை ஜோசியம்

கதை : கௌசிகன்

சித்திரம் : ஜெயராஜ்



















இன்னுங் கேளு தம்பி, சொல்றேன். அந்த மணிபர்சிலே முப்பத்தியாறு ரூபாயும் சில்லறையுமா; அதாவது இரண்டு பத்து ரூபா, மூணு அஞ்சு ரூபா, ஒரு ஒத்த ரூபா நோட்டுங்களும், ஒரு எட்டணா, ஒரு பத்து ஒரு அஞ்சு, மூணு ரெண்டு, ஒரு மூணு பைசா நாணயங்களும் ஆக 36-74 இருந்திச்சா?


ஏன் தம்பி இத்தினி அவசரம்? போகலாம். உக்காரு. அந்த மணிபர்சிலே புருசன் பொஞ்சாதி சேர்ந்து எடுத்துக்கிட்ட ஒரு போட்டோ இருந்துச்சா?


நீங்க ரேகை ஜோசியம் நான் சொல்றீங்களா, இல்லே, எட்சிணி புட்டிச்சாத்தான் வேலை ஏதாவது தெரியுமா?


எட்சிணியுமில்லே ஏவலுமில்லே, இப்போ நான் சொன்னது ரேகை ஜோசியமே இல்லே! உன் பையிலே துருத்திக்கிட்டிருக்கே பிளாஸ்டிக் மணிபர்ஸ், அது தான் இதை எல்லாம் சொல்ல வச்சுது! என் மருமவப் பிள்ளை ரோத்திக்கு டவுனைச் சுத்திப் பாக்கப் போனான். மணிபர்ஸைப் பறி கொடுத்துட்டு வந்து நின்னான். அவன் பணம் நல்ல பணம். நீ காலை யிலே என்னைத் தேடிக்கிட்டு வந்துட்டே!


என்ன பெரியவரே டபாய்க்கிறே? என்னு நான் சொல்றா பாக்க ஓரம்னு கொஞ்சம் விட்டா பெரிய நாடகம் ஆடி நம்ம பர்ஸிலேயே கை போட்டுட்டியே!


மைனர் தம்பி! அதோ சிவப்புக்குல்லாக் காரரு வாராரு. ஆனா என்னாலே போலீசுக்கு அலைய முடியாது. ஒண்ணு ரெண்டு செலவு செய்திருந்தியானு லும் போவுது. மரியாதையா பர்ஸைக் கீழே வச்சிட்டு நடையைக் கட்டு...
இல்லே...




யானை வாயிலே போன கரும்பு போல, பிக் பாக்கெட்டிலே போன மணிபர்ஸ் எங்கே வரப்போவுது ன்னு நெனைச்சேன்..ம்... இன்னிக்குத் திராக்கி வராட்டி யும், லாபம் ரூபா முப்பத்தஞ்சும் பைசா பதினாலும். பய ஒண்ணு
அறுபது தான் செலவு செய்திருக்கான்!
றகை ப்படும்
கை படும்

ஒரு சமயம் சென்னை எல்.ஐ.சி. கட்டிடத்தின் அருகிலுள்ள மைதானத்தில் நடந்த கூட்டத்தில் திரு வாரியார் இப்படிச் சொன்னார்:

''பெண்களே ஆண்களைவிட உயர்ந்தவர்கள். மாதா பிதா என்றுதான் முதல்படுத்திச் சொல்வது வழக்கம். நதியையும் பூமியையும் நிலவையும் பெண்மையாகக் கூறுவர். பெண் என்றால் சக்தி என்ற பொருள்படும். சக்தியும் சிவனும் முக்கிய மானவர்கள். ஆனால் அதிலும் சக்தியைத்தான் முதன்மையாகக் கொள்வார்கள். சக்தி ஆக்கும் சக்தியைப் படைத்தவள். சிவன் செல்வனே இருப்பவன். அதனால்தான் நம் வீட்டில்கூட 'சக்தி இருந்தால் செய், இல்லாவிட்டால் சிவனேன்னு இரு' என்று நம்மைக் கூறுகிறார்கள்'' என்று சொல்லி முடித்தார். கொல்லென்ற சிரிப்பொலி அந்தப் பதினான்கு அடுக்குக் கட்டிடத்துக்கும் மேலாக எழும்பியது! தகவல்: அச்சுதமங்கலம் பாப்பா.

## சக்தி இருந்தால் செய்!



○○○○○○○○○

## கட்டுரைக்குப் பரிசு!

சுவிட்சர்லாந்து நாட்டிலுள்ள அனைத்துலக மாணவர்களுக்கான பள்ளி ஒன்றில், ஒரு குறிப்பிட்ட வகுப்பு மாணவர்களை யானையைப் பற்றி ஒரு விரிவான கட்டுரை எழுதும்படி ஆசிரியர் சொன்னார். அதற்கு நிறைய அவகாசமும் கொடுத்தார்.

இங்கிலாந்தைச் சேர்ந்த ஒரு மாணவன் 'நான் வேட்டையாடிச் சுட்ட யானைகள்' என்ற தலைப்பில் நீண்ட கட்டுரை எழுதி அதற்குப் பொருத்தமான பழைய புகைப் படங்களையும் சேகரித்து ஒட்டியிருந்தான்.

பிரெஞ்சு மாணவன் 'யானையின் காதல் வாழ்க்கைகள்' என்ற தலைப்பில் ஏராளமான மேற்கோள்கள் காட்டி ருசிகரமான கட்டுரை ஒன்று எழுதியிருந்தான்.

ஜெர்மானிய மாணவன் 'யானை — அதன் சுபாவம் — யானையின் முன்னோடிகள் — அவற்றின் வருங்காலம்' என்ற தலைப்பில் ஆராய்ச்சிபூர்வமாக மூன்று பாகங்கள் கொண்ட நீண்ட கட்டுரையை எழுதினான். அமெரிக்க மாணவன் யானைத் தந்தத்தாலும் தோலாலும் எப்படி நவீன மரச் சாமான்கள் தயாரிக்கலாம் என்று ஒரு மிகச் சிறிய கட்டுரை எழுதி அதற்கு நகல் ஒன்றையும் எடுத்து, அமெரிக்கப் பத்திரிகைக்கு அனுப்பி அதற்கான சன்மானத்தையும் பெற்று விட்டான்! (ஆதாரம்: காரனெட்)



## தந்திரக் கணக்கு

பத்து பத்து முட்டைகளை 100 ரூபாய்க்கு வாங்கி நூற்று ஐம்பது ரூபாய்க்கு விற்றால் லாபமா? நஷ்டமா? ஒரே நிமிடம்தான். பதில் சொல்லுங்கள் பார்க்கலாம். விடை: நஷ்டம்தான்! பத்து பத்து முட்டைகளை வாங்கி நூற்று, ஐம்பது ரூபாய்க்கு விற்றால் ஐம்பது ரூபாய் நஷ்டம்தானே!

## ராகத்தை அடகு வைத்தவர்



சரபோஜியரசர் காலத்தில் நரஸிம்ம ஐயர் என்னும் சங்கீத வித்துவான் ஒருவர் இருந்தார். ஒரு நாள் அரசர் முன்னிலையில் இவர் கச்சேரி நடைபெற்றது. இவருக்குச் சங்கராபரண ராகம் மிகவும் கைவந்ததாம். அரசர் முன்னிலையில் சங்கராபரண ராகத்தை விரிவாக ஆலாபனஞ் செய்து, பல்லவி, கற்பனை ஸ்வரம் முதலியன பாடி வரலானார். அவர் இனிமையாகப் பாடப் பாட அரசரோடு இருந்த யாவரும் ஒன்று பட்டு இசையில் மயங்கினர். அரசர் அவருடைய ஆற்றலை உணர்ந்து அவருக்குச் சங்கராபரண நரஸிம்ம ஐயர் என்னும் சிறப்புப் பெயரை அளித்தார்.

ஒரு சமயம் இந்த வித்துவானுக்கு எதிர்பாராத வண்ணம் பெருஞ்செலவு உண்டாயிற்று. அதற்காகக் கடன் வாங்கவேண்டியிருந்தது. அக்காலத்தில் கபிஸ்தலத்தில் இருந்த இராமபத்திர மூப்பனாரென்பவர் சங்கீத ரசிகராகவும், சங்கீத வித்துவான்களுக்கு ஒரு பெரு நிதியாகவும் விளங்கினார்.

வித்துவான் கபிஸ்தலம் சென்று அவரைக் கண்டார். மூப்பனார் வித்துவானை உபசரித்துப் பாராட்டி அளவளாவினார். வித்துவானும் சில நாட்கள் அங்கே

## ◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇ யார்

அமெரிக்க ஜனாதிபதியாக இருந்த அவர் 1923ல் நியூயார்க்கில் உள்ள ஒரு பெரிய கம்பெனியில் முக்கிய அதிகாரியாக இருந்தார். சினிமாவுக்குக் கதை எழுதிப் புகழ்பெற வேண்டுமென்பது அவருக்கு ஆசை. ஒரு கதையை எழுதி பாரமவுண்ட் பிக்சர்ஸ் என்ற பிரபல படக் கம்பெனிக்கு அனுப்பினார். அக்கதை திருப்திகரமாக இல்லாததால் திருப்பி அனுப்பப்பட்டு விட்டது. இந்நிகழ்ச்சியைப் பிற்காலத்தில் அவர், ''என் கதையை அப்போது ஏற்றுக் கொண்டிருந்தால் வெள்ளை மாளிகையில் வசிக்கும் பேறு கிட்டியிருக்குமா?'' என்று நகைப்புடன் குறிப்பிடுவது வழக்கம். இன்றைய ஜனாதிபதி ஜான்ஸன் தமது குருவைப் போல அவரை மதிக்கிறார்.

இரக்கமுள்ள நெஞ்சில் அன்பு பிறக்கும். நாணமுள்ள நெஞ்சில் அறம் பிறக்கும். நன்மை தீமை தெரியும் நெஞ்சில் மெய்யுணர்வு பிறக்கும். ஆணவமில்லாத நெஞ்சில் மரியாதை பிறக்கும். — கன்பியூஷியஸ்

தங்கினார். பிறகு ஒரு நாள் தமக்குப் பொருள் சடனுக வேண்டியிருந்ததை மெல்ல மூப்பனாரிடம் கூறினார்.

மூப்பனார் புன்னகையுடன், ''எவ்வளவு வேண்டும்?'' என்று கேட்டார்.

''எண்பது பொன் வேண்டும்.''

''கடன் வேண்டும் என்கிறீர்கள்; எதையாவது அடகு வைப்பீர்களா?''

''ஓ! வைக்கிறேன், ஓர் ஆபரணத்தை!''

''எங்கே? அதை எடுங்கள், பார்க்கலாம்.''

''அதைக் கண்ணால் பார்க்க முடியாது; காதினால் கேட்கலாம்; எக்காலத்திலும் அழியாதது; இன்பத்தைத் தருவது. என் உடைமையாகிய சங்கராபரண ராகமே அது. தங்கள் கடனைத் திருப்பிக் கொடுக்கும் வரையில் அதை எங்கும் பாடுவதில்லை!''

மூப்பனாரும் அதற்கு இசைந்து ஒரு கடன் பத்திரம் எழுதி வாங்கிக்கொண்டு, வித்துவானுக்குப் பொன்னையும் கொடுத்தார். அன்று முதல் பல இடங்களில் கச்சேரி செய்தும், இந்தச் சங்கராபரண ராகத்தை இவர் பாடுவதே இல்லையாம்!

இதைக் கேள்வியுற்ற மூப்பனார் பெரும் மகிழ்ச்சி கொண்டு, வித்துவானிடம் வந்து அந்தக் கடன் பத்திரத்தையும், மேலும் பொருளையும் கொடுத்து இப்படிச் சொன்னார்:

''நீங்கள் பணம் வேண்டுமென்றால் உடனேயே கொடுத்திருப்பேன். கடனைக் கேட்டதுதான் எனக்கு வருத்தத்தை யளித்தது. கடன் என்று நீங்கள் கேட்டதும் 'விளையாட்டாகவே நானும் எதை அடகாக வைப்பீர்கள்' என்று கேட்டு விட்டேன்!''

— ஏ. சீனிவாசன்

## தெரிகிறதா ?

ஒரு கிழக்கு ஐரோப்பிய நாட்டு அதிபரின் பெயர் அவரது இயற்பெயரல்ல. இயற்பெயர் ஜோஸப் ரோஜ். ஹிட்லருக்கு எதிராகச் சுதந்திரப்போராட்டக் கொடியை உயர்த்திய போது அவர் பல முறை தலை மறைவாகச் செல்ல நேரிட்டது. அப்பொழுது சூட்டிக் கொண்ட புனைபெயர்களில் ஒன்றுதான், பின்னர் நிலைபெயராகி விட்டது! இவர் ஓர் இராணுவத் தளபதி என்பதை இவர் பெயரைக் குறிப்பிடும்போது நாம் மறப்பதற்கில்லை. இவர்கள் இருவரும் யார் என்று அடையாளம் தெரிகிறதா? (விடை: படங்கள்)







'யார் தெரிகிறதா ?' விடை :

1. பிரான்சின் பு. குல்லெவிட். தலைவர் மார்ஷல் டிட்டோ. 2. யூகோஸ்லாவியத் தலைவர் : கருப்பு.

## விஞ்ஞானம்

சாதாரண மனிதனது விழியானது 5 லட்சம் விதமான வண்ணங்களைப் பார்க்கக் கூடிய ஆற்றலுடையது. இந்த விழிகள் சாதாரணமாக அசைவற்று இருப்பதே இல்லை—சதுராடிக்கொண்டே இருக்கின்றன. தூங்கும்போதுதான் அவைகள் சலனமற்று இருக்கின்றன. ஆயினும் கனவுகள் காணும்போது விழிகள் ஆடிக்கொண்டேதான் இருக்கின்றனவாம்.

குடந்தை — வை. செயராமன்



## பெண்மணிகளுக்கு !

உங்கள் புழக்கத்திலுள்ள வெள்ளிப் பாத்திரங்கள் என்றென்றும் பளபளப்பாக இருக்க வேண்டுமா? அதற்கு இதோ ஒரு வழி. உருளைக்கிழங்கை வேக வைத்த தண்ணீரில் சிறிது நேரம் வைத்திருந்தால் பாத்திரங்கள் பளபளப்பாகவே இருக்கும்.

* * *

பித்தளை, செப்புப் பாத்திரங்களைச் சுத்தம் செய்யும்போது பாலிஷ் செய்யும் துணியைக் கோதுமை மாவில் சிறிது தேய்த்துக் கொள்ளவும். இது பாத்திரத்தை நெடுநேரம் பளபளப்பாய் இருக்கச் செய்கிறது.

ஆதாரம் : 'தையல் இளப்'

மறு நாள் காலையில் சீனு பயில்வானுடன் காவேரிக்குச் சென்றான் நாணு. ஜெகு வரவில்லை.

''அது வராதுடா...என்னைக் கண்டால் குலை நடுக்கமாச்சே அதுக்கு!'' என்றான் சீனு. நடந்தவாறே ஜெகுவைப் பற்றிய விமர்சனத்தை வெளியிட்டான் அவன்: ''அது ஓர் அரைப் பைத்தியம். சினிமாப் பாட்டாகப் பாடிக் கொண்டிருக்கும்...பெரிய காதல் மன்னன்னு நினைப்பு மனசிலே. ஒரு நாள் என்னிடம் ஏதோ விசிறினான். அப்படியே அலாக்காகத் தூக்கிக் காவேரியிலே போட்டுட்டேன். அன்றைக்குப் போனதுதான், எதிரே வரவே வராது அப்புறம்...''

அணையின் சரிவில், மோதிச் சுழிக்கும் நீரில் நீந்தியவாறே சீனு இன்னும் பல செய்திகளைச் சொன்னான். அடுத்த வாரம் திருச்சிக்குப் போகப் போகிறானாம். அங்கே ஒரு குஸ்திச் சண்டை நடக்கிறதாம். ''இந்தப் பயலுங்க ஒழுங்கா விளையாடல்லே, நானே புகுந்து ஒரு கை பார்த்து விடறதுன்னு முடிவு செய்திருக்கிறேன்'' என்றான். பேச்சு எப்படி எப்படியோ வளர்ந்து இறுதியில் ஜெகுவின் காதல் புரளிக்கே வந்து நின்றது. ''என்ன காதலைக் கண்டு விட்டது இந்தப் பைத்தியம்?...காதல் என்றாலே பைத்தியம் தானே!.... ஹாய்யா கர்லா, பஸ்கி, பார் வேலை செய்வதை விட்டு விட்டு, டுயட்டும் கீயட்டும் எதற்காக?'' என்றான் சீனு.

சீனு புறப்பட்டுப் போனான். நாணு அணையின் மீது சிறிது நேரம் உட்கார்ந்திருந்தான். வெய்யில் உறைத்தது. அங்கு உட்கார்ந்திருப்பது சிரமமாக இருந்தது. அருகிலிருந்த மாந்தோப்புக்குள் நுழைந்தான். அத்தானுடைய தோப்புத்தான் அது. ஆனால் அவனுக்கு முன்பே அங்கு கமலாவும் சீதாவும் வந்திருந்ததைக் காணவே மூலையில் புதராக மண்டிக் கிடந்த மல்லிகைச் செடியின் மறைவில் அவன் அமர்ந்தான். காதல் பற்றிய சர்ச்சையையே உதறி எறிந்த மனத்தில் அந்தப் பெண்களின் முந்தைய பேச்சின் நிழல் படியவே, மீண்டும் இப்போதும் அந்தப் பேச்சு தொடரக் கூடுமோ என்கிற குறுகுறுப்பும் ஆவலும் எழுந்தன. இந்த மனம் என்ற ஒன்று ருசி, சூழ்நிலை, தாபம் என்னும் நிலைகளில் பச்சோந்தியாக அல்லவா இருக்கிறது!

பேச்சுக் குரல் கேட்டது. வளையல் ஒலியையும் கால் கொலுசின் அசைவையும் மீறிக் காதில் விழுந்த குரல் ஆண் குரலாக இருக்கவே நாணு திகைத்தான். அத்தான் அல்லவா வந்திருக்கிறார்!

''அப்பா! எனக்குச் சிவப்புப் பட்டுப் பாவாடை வேண்டும்'' என்றாள் கமலா.

''பாவாடைதானே?... தைத்துக் கொள்ளேன். கமலாவுக்கு இல்லாததாடா?'' என்றார் அத்தான். கமலாவை 'டா' போட்டு அவர் விளித்ததில் அது அன்பின் மிகுதி வெளியீடாகும் என்பதை நாணு அறிவான்.

''பாவம்பா நாணு... அவனை அத்தை திட்டிக் கொண்டிருக்கிறாள்.''





# 4 யாத்திரை

ஏ.எஸ்.ராகவன்

வேடிக்கை. இந்தக் காதலை யார் கேட்டார்கள்? திரும்பத் திரும்ப விவாத விஷயமாக இது முளைக்கிறதே, ஏன்?

சீனு காணுவது போல் இதில் பொருளே இல்லை. துன்பங்களின் சுமையாக அமைந்து விட்ட அவனுடைய தாயின் வாழ்வும் இன்று பிறர் வீட்டில் ஒதுங்கியிருக்கும் அவனது ஆதரவற்ற நிலையும் அவனுக்குச் சீனுவின் விளக்கமே நல்லதென்று உணர்த்தின.

நீச்சலில் உற்சாகம் குன்றி விட்டது.

அத்தான் சிரித்தார்.

''அப்பா, அவனுக்கும் தீபாவளிக்கு பட்டுத் துணியிலே தைக்கலாமா?''

''பாவாடையா ?''

''போங்கப்பா'' என்று சிணுங்கினாள் கமலா. பிறகு கேட்டாள். ''ஏம்பா, நாணு நமக்கு உறவுதானே?''

''இல்லை......'' அவர் மறுபடியும் பலமாகச் சிரித்தார்.

''ருக்கம்மா சொன்னாளே, உறவுதான் என்று.''

''இல்லே.... உறவில்லே.... உறவுக்கும் மேலே.''

''அத்தைக்கு ஏன் அவனைக் கண்டால் பிடிக்கவில்லே?''

''கமலா! இதெல்லாம் உனக்குப் புரியாத விஷயம்..... நாணுவைச் சுற்றி ஒரு கதை இருக்கிறது. அழகான கதை. ஆனால் சோக மான கதை. அத்தைக்கு அவனைப் பிடிக்க வில்லே என்பது சோகம்..... உனக்கு அவன் மீது அன்பும் அனுதாபமும் இருக்கிறது பார், அது அழகு......''

அத்தான் சொன்னது அவளுக்கு விளங்க வில்லே. நாணுவுக்கும் விளங்கவில்லே. ஆனால் சொல்ல வேண்டிய அளவுக்கு மேலேயே அவர் சொல்லி விட்டாரென்று தோன்றியது.

வளையலும் சதங்கையும் மெல்ல இழைந்து நடந்தன. மெல்ல மெல்லத் தேய்ந்தன. பிறகு மறைந்தன. அவர்கள் தோட்டத்தி லிருந்து புறப்பட்டுப் போய் விட்டார்க ளென்று எண்ணிக் கொண்டு நாணு மறை விடத்திலிருந்து தலையை நீட்டினன். ஆனால் சீதா பார்த்து விட்டாள் அவனை. ''அதோ அதோ.... நாணு.....'' என்று கூவினள்.

நாணு அவர்களை நோக்கி நடந்தான்.

''தூ! எதுக்காக அங்கே ஒளிந்து கொண் டிருந்தாய்?'' என்று கேட்டாள் கமலா.

''வெறுமேதான்.....'' என்றான் நாணு.

''வெறுமே என்ன வெறுமே?... எனக்கு ஒட்டுக் கேட்கிறவர்களைக் கண்டால் பிடிக் கவே பிடிக்காது'' என்றாள் கமலா.

நாணு அதிர்ந்து விட்டான். சற்றுமுன் அத்தானிடம் அவனுக்குத் தீபாவளி உடைக் காகச் சிபாரிசு செய்த பெண்ணு இப்படிக் கடிந்து கொள்கிறாள்!

அத்தான் ஒன்றும் சொல்லவில்லே. மெல்ல முன்னே நடந்தார். தலையை நிமிர்த்திக் கொண்டு கமலா அவருக்குச் சரியாக நடக்க லானாள். பேச்சுக்குப் பொருள் ஏதும் அகப் படவில்லே போலிருந்தது. வீட்டை நெருங் கியதும் அத்தான் நின்றார். ''கமலா, நீயும் சீதாவும் முன்னால் போகலாம்'' என்றார்.

அவர்கள் போனதும் நாணுவை உற்றுப் பார்த்தார் அவர். அந்தப் பார்வை அவனை என்னவோ செய்தது. தன்னிடம் தனிப்பட ஏதோ சொல்வதற்காகவே கமலாவையும் சீதாவையும் போகச் சொல்லியிருக்கிறார் என்பது புரிந்ததும் சங்கடம் அதிகமாகி விட்டது அவனுக்கு.

''கமலா சொன்னது போல் ஒட்டுக் கேட்பது கெட்ட பழக்கம்'' என்றார் அவர்.

''நான் ஒட்டுக் கேட்கவில்லே அத்தான்.''

அவர் அந்தச் சமாதானத்தை ஏற்க விரும்பவில்லே போலிருந்தது. ''அப்படிக் கேட்பதானால் நீ இங்கே இருக்க முடியாது. கல்யாணி ஏதாவது சொல்லிக் கொண்டே இருப்பாள். அதைக் கேட்டு நீ வருத்தப்படு வாய். நான் வருத்தப்படுவேன்..... அப் புறம் எல்லோருமே வருத்தப்படும்படி ஆகி விடும்'' என்று தொடர்ந்தார் அவர்.

அத்தையின் நிமித்தம் இவ்வாறு அவர் பேசினர் என்பது அவனுக்கு ஆறுதலாக இருந்தது. அவனைக் குற்றம் சாட்டும் நோக் கம் அவருக்கு இல்லேயல்லவா?

''அவள் வழிக்கு நீ போகாதே.... அவ ளுக்கு வாய் அதிகம்...... நானே அவளுடைய வாய்க்குப் பயப்படுகிறேன்'' என்று முடித் தார் அவர். ''சரி, நீ போகலாம்.''

நாணுவுக்கு வியப்பு ஒருபுறம், கோபம் மறுபுறம். அத்தானையே பயப்படுத்துகிற வாய் படைத்தவளா அத்தை! அப்படி யென்றால் அவளைச் சும்மா விடலாமா?

நேரே ருக்கம்மாவிடம் போனன். அடுப் படியில் காரியமாக இருந்தாள் அவள். அத் தான் சொன்னதை—அத்தைக்கு வாய் பெரிது என்பதையும் அதற்கு அவரே பயப்படுகிறார் என்பதையும் ரகசியமாக அவளிடம் சொல்லா விட்டால் தலே வெடித்து விடாதா!

''ஆமாம்டா, கண்ணு..... அவள் பொல் லாதவள்...... அதுவும் நீ இங்கே இருப்பது வெறும் வாய்க்கு அவல் கிடைத்தது மாதிரி அவளுக்கு'' என்றாள்.

''ஏன்? நான் என்ன செய்தேன்?''

''நீ எதுவும் செய்ய வேண்டியதில்லே. உன் அம்மா செய்தது, அப்பா செய்தது போதும் அவளுக்கு.''

''அம்மா என்ன செய்தாள்?''

ருக்கம்மா நாக்கைக் கடித்துக் கொண் டாள். சொல்லக் கூடாததைச் சொல்லிவிட் டோமே என்று நொந்து கொண்டவளாய், ''அதை எல்லாம் கேட்டு உனக்கு என்ன ஆக வேண்டும்? பேசாமல் போ'' என்றாள்.

''சொன்னால்தான்....''

''சொல்ல முடியாது.''

நாணுவுக்கு நெஞ்சு விம்மிற்று. ருக்கம்மா எதையோ மறைக்கிறாள். அவள் மறைக்கும் அந்த ஒன்றுக்காகத் தானே அத்தையிடம் அவன் வசை பெறுகிறான்? அது என்ன?

''சொல்ல மாட்டாயா ருக்கம்மா?''

சிறுவனின் ஆதங்கம், கவலே, வேதனை எல்லாம் ருக்கம்மாவுக்கு விளங்கின. 'வய தாகி என்ன செய்வது? அசட்டுப் பிசட் டென்று உளறிவிட்டுத் தவிக்க வேண்டி யிருக்கிறது!' என்று தன்னையே கடிந்துகொண் டாள். எதிரே நிற்பவனே விளக்கம் கேட் கிறான். பனிச்சென்று ஒரு வழியைக் கண்டு பிடித்தாள் ருக்கம்மா. கலகலவென்று சிரித் தாள். ''பயந்து விட்டாயா நாணுக்கண்ணு? உன் அம்மாவும் அப்பாவும் செய்தபிசகு என்ன தெரியுமோ?'' சற்று நிறுத்திக் குறும்பு தவழ அவனைப் பார்த்தாள். ''நீ இப்போ குழந்தை யாக நிற்கிறயே, அந்த மாதிரி ஒரு சூதும் வஞ்சனையும் தெரியாமல் நின்றார்கள்... உன் அம்மாவுக்கு வெளுத்ததெல்லாம் பால்... அத்தைக்கோ வெளுத்ததெல்லாம் கண் ணும்புத் தண்ணீர்.... நல்லவர்கள் வாழ முடியாத உலகத்திலே சுந்தரி தவித்துப் போனள். இதுதான் அவளிடமிருந்த பிசகு... போதுமா?'' என்றாள்.

அதை அவள் சொன்ன முறையும் குரலி லிருந்த அன்புப் பசையும் நாணுவின் கேள் விக்கு ஓரளவு விடையாகவே அமைந்தன. அம்மா கபடமில்லாதவள் என்று ருக்கம்மா சொன்னதில் அவனுக்கு மகிழ்ச்சி, நிம்மதி. அவள் வேறு பதில் கொடுத்திருந்தால் அவன் தவித்திருப்பான். இந்தப் பதில் ஆறுதலேயே தந்தது. ஆனால் இதுவே முழுமையான பதிலும் அல்ல என்று உள்ளுணர்வு உணர்த்

றிற்று. வேறு ஏதோ ஒரு ரகசியம், புதிர் இருக்கத்தான் இருக்கிறது.

நேரே மாடிக்குப் போனான்.

கமலாவின் அறையில் பாட்டு கொப்பளித்தது. நாணாவுக்கு அதை ரசிக்கும் மன நிலை இல்லை. அப்படிச் சொல்வதைவிட இனி அந்த அறை அருகில் செல்லக்கூட அவன் விரும்பவில்லை என்பதே சரியாக இருக்கும். ஒட்டுக் கேட்கிற வழக்கம் அவனிடமில்லை என்பதைக் கமலா உணர வேண்டும்.

எதிர் அறையில் ஜெகு குறுக்கும் நெடுக்கும் நடந்து கொண்டிருந்தான். தொள தொளவென்று உடம்பில் ஒட்டாத பனியனும் பைஜாமாவும் ஒட்டடைக் குச்சி போன்ற தோற்றத்தைத் தந்தன. நாணா வந்ததை அவன் கவனிக்கவில்லை. தலைக்கு மேலே வெள்ளம் பரவியிருப்பது போல் விட்டத்தையே பார்த்துக் கொண்டிருந்தான்.

கமலாவின் அறையில் பாட்டு நின்றது. அவள் மட்டும் அவசரமாக இறங்கிக் கீழே போவது தெரிந்தது. சீதா அறை வாயிலிலேயே நின்றாள். பிறகு என்ன தோன்றிற்றோ நாணாவின் அறையை நோக்கி அவள் வந்தாள். ஜன்னல் திரைச் சீலை மூலம் அவள் வருவது தெரிந்தும் கவனியாதவன் போல அவசரமாக ஒரு புத்தகத்தில் தலையைப் புதைத்தான் நாணா.

அவள் நிலையருகில் நின்றாள்.

"என்ன சீதா?" தலையை நிமிர்த்தியதும் அவளைக் கண்டு வியப்பு மீதுற்றவன் போல் கேட்டான் அவன்.

"சீனு அண்ணா வரச் சொன்னார் உன்னை" என்றாள் அவள்.

"எதற்கு?"

"அது தெரியாது. வரச் சொன்னார்."

"சரி, சீதா.... சாயந்திரம் போகலாமில்லையா?"

"உம்......"

அவள் போய் விட்டாள்.

நாணா மீண்டும் புத்தகத்துள் தலையைப் புதைப்பதற்குள் கணுக்கென்ற சிரிப்பொலி கேட்டது. அந்த ஒலி எதிர் அறையிலிருந்து வந்தது. ஜெகு கண்ணில் குறும்பு தவழ நின்று அவனைப் பார்த்தான்.

"ஏன் சிரிக்கிறாய்?" என்றான் நாணா.

"சிரிக்காமல் அழச் சொல்கிறாயா?" என்று கேட்டான் ஜெகு.

"ஆமாம்" என்றான் நாணா.

ஜெகு வேகமாக அவன் அருகில் வந்தான். "நார்யாணா, வாட் ஈஸ் இஸ்?.... ஏன் கவலையாக இருக்கிறாய்?" என்றான்.

"எனக்கு ஒன்றுமே பிடிக்கவில்லை ஜெகு.... ஏன் வாழ வேண்டும் என்றிருக்கிறது."

"நீயும் அப்படித்தானா?" என்று கேட்டான் ஜெகு, அனுதாபம் மீதூற. "எனக்கு வாழப் பிடிக்கவில்லை, நார்யாணா... வா. இரண்டு பேருமே ஒரு முடிவு தேடுவோம்."

நாணா சிரித்தான். "ஜெகு! உனக்கு என்ன குறை?.... நீ பணக்காரப் பையன். என்னைப் போல அநாதையா? பங்களூரில் ஒரு பெரிய மில் இருக்கிறது உனக்கு.... அம்மா, அப்பா எல்லோரும் இருக்கிறார்கள்" என்றான்.

ஜெகு நண்பனை உற்றுப் பார்த்தான். "நோ. நோ.... யு ஆர் ராங்..... எனக்கு


*The following particulars regarding the ownership of the 'KALKI', the Tamil weekly newspaper, are published, as called for by Rule 8 of the Registration of Newspapers (Central) Rules, 1956.*

**FORM IV**

1. *Place of Publication :* **Madras**
2. *Periodicity of its Publication :* **Weekly**
3. *Name of Printer, Publisher and Editor :* T. Sadasivam

   *Nationality :* Indian

   *Address :* 20, Dr. Guruswami Mudaliar Road, Kilpauk, Madras-10

4. *Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital:*

Sri T. Sadasivam, 20, Dr. Guruswami Mudaliar Road, Madras-10. Srimathi M. S. Subbulakshmi, 20, Dr. Guruswami Mudaliar Road, Madras-10. Sri R. Ananthanarayanan, 20, Dr. Guruswami Mudaliar Road, Madras-10. Sri K. Rajendran, 1, Fifth St., New Colony, Lake Area, Madras-34. Sri V. Vaidyanathan, 3, Varadarajalu Naidu Road, Egmore, Madras-8. Sri K. R. Athmanathan, 20, Dr. Guruswami Mudaliar Road, Kilpauk, Madras-10.

1-3-66

*T. Sadasivam,*
***Publisher***


எல்லாம் இருந்தும் எதுவுமே இல்லை இப்போது...... தெரிந்து கொள்.... உண்மையாகவே எனக்கு வாழப் பிடிக்கவில்லை" என்று கூறினான்.

"ஏன்?"

"காரணம் தெரிய வேண்டுமென்றால் இந்தக் கடிதத்தைப் படித்துப் பார்" என்று கசங்கி ஈரம் படிந்திருந்த ஒரு கடிதத்தை அவன் கையில் திணித்தான் ஜெகு.

நாணா அதைப் பிரித்துப் படித்தான்.

டியர் ஜெகு,

என்னை மன்னித்துவிடு. நான் உன்னிடம் காதல் கொண்டிருப்பதாக நீ நினைத்தது பிசகு. என் மம்மியும் டாடியும் உன் கடிதத்தைப் படித்து விட்டு விழுந்து விழுந்து சிரித்தார்கள். எனக்கு அவமானமாகப் போய் விட்டது. இந்த மாதிரிக் கடிதங்கள் எழுதுவதைவிடப் பாடங்களைப் படித்தாலாவது பரிட்சையில் தேறி முன்னுக்கு வரலாம்.

இப்படிக்கு, **ரோஸி**

அன்றையத் தபாலில்தான் கடிதம் வந்திருந்தது. ஆனால் அதற்குள் அது ஆயிரம்

கசங்கலுக்கும் கண்ணீருக்கும் ஆட்பட்டு விட்டது.

''நான் இதை எதிர்பார்க்கவேயில்லை, நாணா...... என்னிடம் அவள் எப்படிப் பழகினாள் தெரியுமா?.... என் பாக்கெட் மணியிலிருந்து எத்தனை ஐஸ்கிரீம், சாக்லேட் வாங்கித் தந்திருப்பேன் அவளுக்கு! கடைசியில் என்னை அவள் ஏமாற்றி விட்டாள்'' என்றான் ஜெகு.

நாணாவுக்கு அவன் வேதனை புரிந்தது. ஆனால் எப்படி ஆறுதல் கூறுவதென்று தெரியவில்லை. நண்பனையே பரிதாபமாகப் பார்த்தான்.

ஜெகு அந்தக் கடிதத்தை வாங்கிக் கிழித்து எறிந்தான். ''இருக்கட்டும். இவளை நான் சும்மா விடப் போவதில்லை. இந்த ஜெகு யார் என்பதைக் காட்டுகிறேனா இல்லையா, பார்'' என்று கறுவினான்.

''என்ன செய்வாய்?'' என்று கேட்டான் நாணா.

''ஒரு மொட்டைக் கடுதாசி எழுதிப் போடப் போகிறேன்'' என்றான் ஜெகு.

''மொட்டைக் கடுதாசியா?''

''ஆமாம்.''

''அப்படீன்னா?''

''மொட்டைக் கடுதாசின்னா தெரியாதா? இந்த ரோஸியின் வண்டவாளங்களையெல்லாம் அம்பலமாக்கிப் பள்ளிக்கூட பிரின்சிபாலுக்கு ஒரு கடுதாசி எழுதிப் போட்டால் அதுதான் மொட்டைக் கடுதாசி.... அதிலே யார் கடிதம் எழுதினா, எங்கிருந்து எழுதினா என்ற விவரமெல்லாம் இருக்காது.''

நாணா பயந்தே விட்டான். இப்படி எல்லாம் கடிதங்கள் எழுதலாம் என்பது வியப்பைத் தந்தாலும் எழுதுவதால் அபாயம் வரும் என்று தோன்றிற்று. ''வேண்டாம், ஜெகு!'' என்றான்.

''கீப் கொயட்..... இந்த ஜெகு ஒன்றை நினைத்தால் அதை நடத்தியே தீருவான்.''

அவனைத் தடுத்து நிறுத்த முடியாதென்று தோன்றியது. ரோஸி என்கிற அபலை ஜெகுவின் கடிதத்தால் பள்ளியில் அவமானத்துக்குள்ளாகி, தலைதூக்க முடியாமல், வெளியேற்றப்படுகிற காட்சி நாணாவின் கண் முன்னால் வந்தது.

அவனுடைய பயத்தைப் புரிந்து கொண்டவன் போல ஜெகு சொன்னான். ''ஆனா இன்றைக்கே கடிதம் எழுதப் போவதில்லை நாணா.. இரண்டு நாட்கள் பொறுத்து வொயலட்டிடமிருந்து என்ன கடிதம் வருகிறது என்று பார்த்துக் கொண்டு அதன் பிறகுதான் எழுதுவேன்'' என்றான்.

''வொயலட்டா?''

''ஆமாம்..... அவளும் நிறைய ஐஸ்கிரீமும் சாக்லேட்டும் சாப்பிட்டவள்தான்.... சினிமாவுக்குக்கூட வருவாள் என்னோடு.''

நாணா பரபரப்புடன், ''அவளும் இதே போல் எழுதி விட்டால் என்ன செய்வது?'' என்று கேட்டான்.

''அதற்காகத்தானே வெயிட் பண்ணுகிறேன்...... அவளும் இதே மாதிரி எழுதினால் ஒரே கல்லில் இரண்டு மாங்காய். அதாவது, ஒரே மொட்டைக் கடுதாசியில் இரண்டு பேரையும் பற்றி எழுதிப் போட்டுவிடுவேன்.. எப்படி என் ஐடியா?''

நாணாவுக்குத் திடீரென்று ஒரு சந்தேகம் வந்தது. ''ஜெகு, நீ எழுதுவது போல் உன்னைப் பற்றி யாராவது எழுதி விட்டால் என்ன ஆவது?'' என்று கேட்டான்.

ஜெகு சிரித்தான். உரக்கச் சிரித்தான். ''என்னைப் பற்றி எழுத யாருக்குத் துணிச்சல் வரும்?.... எழுதினான்னா அவன் காதைத் திருகிவிட மாட்டேனா?'' என்றான்.

''எழுதினது யார் என்று தெரிந்தால் தானே திருகுவாய்?''

''எல்லாம் தெரியும்..... ஜார்ஜ் எழுதுவான்; இல்லாவிட்டால் விக்டர் எழுதுவான் — இந்த இரண்டு பயல்களுக்கும் எனக்கும்தான் போட்டி.''

ஜெகுவின் திட்டம் தற்காப்பு அம்சங்களையும் பூண்டதாகவே விளங்குவதைத் தெரிந்து கொண்டதும் நாணாவுக்கு அவனுடைய காதல் விவகாரங்களைவிட அவற்றைச் சமாளிக்கும் அவனுடைய சாமர்த்தியத்தைக் கண்டு பெருமை உண்டாயிற்று.

''இதெல்லாம் கிடக்கட்டும், நாணா..... இவற்றையெல்லாம் ஒரு நொடியில் தீர்த்துக் கட்டி விடுவேன்... இப்போது என் 'பிராப்ளம்' மெல்லாம் இந்த மம்மியை என்ன செய்வது என்பது பற்றித்தான்.....'' என்றான் ஜெகு.

''ஏன்? அவளுக்கும் ஒரு மொட்டைக் கடுதாசி எழுதேன்'' என்று யோசனை சொன்னான் நாணா.

''மை காட்! மம்மியிடம் அது நடக்காது. அப்புறம் என் தலை மொட்டையாகி விடும்'' என்று கையை உதறினான் ஜெகு. பிறகு அவனாகவே விளக்கமும் சொன்னான். ''காதல் விவகாரம் வேறே, குடும்ப விவகாரம் வேறே.... பார்க்கப் போனால் காதலுக்கும் குடும்பத்துக்கும் சம்பந்தமே இல்லை..... இது நார்த் போல், அது ஸௌத் போல், அதாவது வடதுருவம், தென் துருவம் மாதிரி....... காதல் என்பதே விளையாட்டுத் தானேடா?''

நாணாவுக்கு இந்த விளக்கம் புதிதாக இருந்தது. தெய்வீகம், மண்ணாங்கட்டி, பயில்வான் வேலை, இல்லவே இல்லை. இத்தியாதி விமர்சனங்களுக்குட்பட்ட காதலுக்கு இப்போது வேறு பொருள் தென்படுகிறதே!

''விளையாட்டுப் போட்டியிலே நீ என்ன செய்கிறாய்? எதிர்க்கட்சியை ஜெயிக்கப் பாடுபட்டு விளையாடுகிறாய். இல்லையா? ஜெயித்ததும் உடனே மற்றொரு கட்சியோடு போட்டி போடப் போய் விடுகிறாய்....அது தான் முறை..... ஜெயித்த கட்சியுடனே திரும்பத் திரும்ப விளையாடுவார்களா?.... காதலும் அப்படித்தான்'' என்று சொல்லிவிட்டு உரக்கச் சிரித்தான் ஜெகு.

வெற்றி தோல்வி என்னும் விளையாட்டாகவும் மாறி மாறிப் பல பந்தயங்களில் ஈடுபடும் குதிக்கோளாகவும் காதலை அவன் விவரித்ததை நாணாவால் புரிந்து கொள்ள முடியவில்லை. விழித்தான். இவ்வளவில் பரபரப்பும் பரவசமும் ஊட்டுகின்ற பிரச்னையை அவன் இத்தனை காலமும் ஆராயாமல் இருந்து விட்டது வியப்பைத் தந்தது. அம்மா ஒரு பெரும் அணையாக

# வசந்தத்தின்
# புதுமலர்ச்சி
# மென்வாடையின்
# குளிர்ச்சி...

லக்மே டால்க் பூசிக்கொள்வதால் நாள் பூராவும் புது மலர்ச்சி கிட்டுகிறது. அதன் நறுமணம் நீடித்துக் கமழட்டும். மிருதுவான அதன் அரவணைப்பின்மூலம் நீங்கள் பெறும் குளுமையும், புத்துணர்ச்சியும் நீங்கள் அனுபவித்தறியாப் புதுமை. லேவண்டர், நிர்வாண், ஸாண்டல்வுட், அப்ஸரா, வெட்டிவேர் என்று பல வாசனைகள் உள்ளன — நீங்கள் தேர்ந்தெடுத்துக்கொள்ள.

# லக்மே
## டால்க்




லக்மே ஸ்தாபனத்தாரால் கூட்டாக நடத்தப்படும் "பெமினா மிஸ் இந்தியா 1966"
போட்டியில் கலந்து கொள்ளுங்கள்

அந்த உணர்ச்சிகளைத் தடுத்துத் திருப்பி விட்டிருந்தான் என்றே தோன்றிற்று.

''டோண்ட் ஒர்ரி..... அவளை நான் சரிப்படுத்துகிறேன்'' என்றான் ஜெகு, கட்டிலில் சாய்ந்தவாறே. ''பீகாக், பீகாக் இறகு போடு என்றால் போடுமா?.... எங்க அம்மா வெறுமே பேச்சில் வழிக்கு வரமாட்டாள்.....'' ஜெகுவின் கண்கள் சிவந்தன. கைகளை உயர்த்திச் சூளுரைப்பவன் போலப் பல்லைக் கடித்தான். ''எனக்குப் பாக்கெட் மணியே தருவதில்லை இப்போதெல்லாம்.... சிகரெட்டுக்குக்கூடக் காசில்லாமல் தவிக்க வேண்டியிருக்கிறது'' என்றான்.

''நீ சிகரெட் பிடிப்பாயா?'' என்று கேட்டான் நாணு.

''என்னடா கேள்வி இது! சிகரெட் பிடிக்காமல் மனிதர்களாலே இருக்க முடியுமா என்று கேள்'' என்றான் ஜெகு. நாணுவைப் பார்க்க அவனுக்குப் பரிதாபமாக இருந்தது. இந்தச் சிடனுக்குக் காதல் முதல் சிகரெட் வரை அல்லவா பயிற்சியளித்தாக வேண்டும் போலிருக்கிறது. அவன் எழுந்து உட்கார்ந்தான். ''ஒரு திட்டம் தயாரிக்கப் போகிறேன்.... அது என்ன என்று கேட்காதே.... சரியாகப் பன்னிரண்டு மணிக்கு நான் எங்கிருந்தாலும் என்னை வந்து பார்..... அப்போது தெரியும் இந்த ஜெகுவின் பெருமை. அம்மாவின் வாய்க்கு ஒரு பெரிய பூட்டு போட்டு விடுகிறேனா இல்லையா, பார்.''

நாணுவுக்கு உச்சி முதல் உள்ளங்கால் வரை இன்னதென்று விவரிக்க இயலாத பரபரப்பு பாய்ந்தது. அத்தையின் வாய்க்குப் பெரிய பூட்டா? இது நடைபெறக் கூடியதுதானா? ஜெகு நிறைவேற்றிவிடக் கூடியவன் போலவே தோன்றினான். எவ்வாறு இந்த மாயத்தை அவன் செய்வானோ! அத்தானை பயப்படுகிற வாய் படைத்தவளாயிற்றே அத்தை! ஆயினும் ஜெகு செய்து விடுவான் என்பதில் நாணுவுக்கு ஐயம் இல்லை.

''ஒரே கல்லில் இரண்டு மாங்காயை வீழ்த்தி விடுவேன். அம்மாவின் வாய்க்குப் பூட்டு; அவள் பணம் வைத்திருக்கும் பெட்டிக்கு என் கையில் சாவி..... இது நிறைவேறாத வரையில் ஜெகு ஓயப் போவதில்லை..''

ஜெகு மாடியிலிருந்து இறங்கிப்போனான், மம்மியுடன் போராட்டத்தை நடத்த.

கூடத்தில் அத்தையின் குரல் கேட்டது. ''நான் இருக்கிற வரை எல்லாம் என் இஷ்டப்படிதான் நடக்க வேண்டும். இல்லையோ யாராயிருந்தாலும் சும்மா விடமாட்டேன்..... ஆமாம்.... இந்தக் கல்யாணி யார் என்பதை இன்னும் தெரிந்து கொள்ளவில்லை போலிருக்கிறது'' என்று அவள் உறுமிக் கொண்டிருந்தாள்.

அதை எதிர்த்து ஜெகு போராடிப் பூட்டுப் போட்டு விடுவானா என்பது நாணுவுக்குச் சந்தேகமாக இருந்தது.

பன்னிரண்டு மணி எப்போது வருமென்று காத்திருந்தான் நாணு. ஜெகு கீழே போனவன் திரும்பி வரவில்லை. அவன் எங்கிருந்தாலும் சரியாகப் பன்னிரண்டு மணிக்கு அவனைச் சந்தித்தே விடுவது என்று சங்கல்பம் செய்து கொண்டான் நாணு.

படபடப்பும் ஆவலும் உந்தின. மணி பன்னிரண்டு முறை ஒலித்தது.

கீழே கனம் அமைதியில் தூங்கிற்று. வாசல் அறையில் சத்தமே கேட்கவில்லை. இது என்ன விந்தை? அத்தை பூட்டில் இருந்துமா இந்த அதிசயம்! பாதி திறந்து கிடந்த அந்த அறைக்குள் ஜெகு மூட்டிவிட்ட வாயைத் திறக்க முடியாமல் அத்தை திணறும் காட்சி அவன் கண்முன் விரிந்தது. அநேகமாய் ஜெகுவும் அங்குதான் இருந்தாக வேண்டும்.

நாணு ஒரு கணம் நின்றான். வாசல் அறைப் பக்கம் போவதா வேண்டாமா?

போயே பார்த்து விடுவதென்று துணிந்தான் இறுதியில். அறைக் கதவைத் திறந்தான். ஆனால் அவனுடைய போதாத காலம் அந்த நேரம் பார்த்து வெளியே வர முயன்ற அத்தையின் முகத்தில் கதவு இடித்துவிட்டது. அவளோ தூக்கக் கலக்கத்தில் இருந்தாள். எனவே, கையிலிருந்த மூக்குக் கண்ணாடி நழுவிக் கீழே விழுந்து தூள் தூளாக உடைந்து விட்டது.

நாணு நடுங்கி விட்டான்.

''நீ நாசமாய்ப் போக! உன் தலையில் இடி விழ! உன் கண் அவிந்து போக! ஐயோ, என் தலையே தெறிச்சுப் போச்சே.... கண்ணெல்லாம் துடிக்கிறதே!.... நான் என்ன செய்வேன்?..... அண்ணா, இங்கே வாயேன்'' என்று அலறத் தொடங்கினாள் அத்தை.

திடீரென்று வீடே ஒரு குலுங்கு குலுங்குகிறாற் போலிருந்தது. கூடத்துக்குப் பக்கமிருந்த அறையிலிருந்து அத்தானும் பின் கட்டிலிருந்து ருக்கம்மாவும் தோட்டத்திலிருந்து கந்தனும் ஓடி வந்தனர்.

''என்ன நடந்தது?.... கல்யாணி, என்ன கூச்சல் இங்கே?'' என்று கேட்டார் அத்தான்.

''என்ன நடக்கணும்?.... என் மூக்குக் கண்ணாடி தூளாப் போச்சு'' என்றாள் அத்தை.

''ஏன்?''

''இந்தச் சனியன் கதவைப் படார்னு திறந்து என் முகத்திலே அடித்து விட்டது. பார், என் முகமே திரும்பிப் போயிருக்கிறது... ஐயோ, எது எக்கேடு கெட்டால் என்ன என்று என் வாய்க்குப் பூட்டுப் போட்டுக் கொண்டு ஒரு மூலையிலேதானே கிடக்கிறேன்! வலிய வந்து என் பிராணனை வாங்கினால் என்ன செய்வேன்?'' அத்தை புலம்பினாள்.

அத்தான் நாணுவைப் பார்த்தார். ''இங்கே வா'' என்றார்.

பயந்து நடுங்கி அவர் முன்னால் சென்றான் அவன்.

''இது என்னடா, காரியம்?'' அவன் முதுகில் ஓர் அறை கொடுத்தார் அவர்.

நாணுவுக்குக் கண்முன் எல்லாமே சுழல்வது போலிருந்தது. அத்தானின் கையினால் அடிபட்டு விட்டான்! இது தாங்க முடியாத அவமானமாகப் பட்டது. அவனை—சுந்தரியின் பிள்ளையை — அவர் கைதொட்டு அடித்து விட்டார்! இது வரை யாரிடமும் அடிபடாதவன் இன்று எவரிடம் அடிபடக் கூடாதோ, அவரிடமே அடிபட்டு விட்டான்!

ஒரே ஓட்டமாக அவன் வெளியே வந்தான். தெருவில் வேகமாக நடந்தான். (தொடரும்)

விக்கோ
உருவாக்கிய
மற்றொரு பிரபல
அழகு சாதனம்

......ஒப்பற்ற அழகு வாய்ந்த
விக்கோ டர்மெரிக் வானிஷிங் க்ரீம் ஈடு இணை
இல்லாதது. வசீகரத் தோற்றத்திற்கு மிகவும்
உதவியாக இருப்பதினால், அது உண்மை மதிப்
புக்களைப் பெரிதும் பெற்றிருக்கிறது. மேலும்
விக்கோ டர்மெரிக் வானிஷிங் க்ரீமை யாவரும்
பயன்படுத்திப் பயன் அடையலாம்.

ஆண்களும், க்ஷவரத்திற்குப் பின் உபயோகப்
படுத்தலாம். அதில் சிறப்பு வாய்ந்த கிருமிநாசினி
மருந்துகளின் குணங்கள் அடங்கியுள்ளதுடன்
சருமத்தைப் போஷித்துப் பாதுகாக்கவல்லது.
இது ஒரு அழகு சாதனம் மட்டுமல்ல
ரோமம் வளர்வதைத் தடுக்கிறது. இது பண்டைக்
கால முதற்கொண்டே அனுபவப்பட்ட விஷயம்.

## விக்கோ டர்மெரிக்
## வானிஷிங் க்ரீம்

என்றால் மஞ்சள் ஸ்னோ
சந்தன நறுமணம்
கொண்டது.




விக்கோ லாபரட்டரீஸ்
பம்பாய்-14

*STOCKISTS:* MADRAS : R. L. GOWDER & Co., 59, Bunder Street
COIMBATORE : N. DESAI GOWNDER & Co., Avanashi Road
MANGALORE : K. S. GOWDER & Co., Subhedar Chatram Street



# சேவைக்கு ஒரு சகோதரி

**மோனிகா ஃபெல்டன்**

**—அநுத்தமா**

அது மிகவும் அழகான இடமாக மாறி விட்டது. ஒரு வருட காலத்துக்குள், அதிசயமான மாறுதல் அந்தக் காம்பவுண்டுக்குள் நடந்து விட்டது. சிறு மரங்களும் பூச்செடிகளும் துளிர்த்து அழகாகக் காட்சியளித்தன. டென்னிஸ், பாட்மின்டன் கோர்ட்டுகள் புதிதாக உருவாகியிருந்தன. சகோதரி மீண்டும் பனையோலைக் குடைகளில் பட்டுப் புழுக்களை வைத்து வளர்க்கமுடிந்தது. பள்ளிக் கூடத்தில் தாவர சாஸ்திர வகுப்புக்கு வேண்டிய பூக்களும் இலைகளும் அன்றாடம் பூஜை அறையை அலங்கரிக்கத் தேவைப்பட்ட மலர்களும் தோட்டத்தில் நிறைய இருந்தன.

பிற்பகல் பள்ளி முடிந்து இல்லத்துக்குத் திரும்பியதும் பெண்கள் அவரவர் இஷ்டப்படி பொழுதைக் கழிக்கலாம். மாலை நேரங்களில் யாரும் படிக்க அனுமதிக்கப்படுவதில்லை. விளையாடப் பிரியப்படாதவர்கள் நிழலில் அமர்ந்து பிறர் விளையாடுவதைப் பார்த்துக் கொண்டிருக்கலாம். இல்லையேல், சித்தியுடன் கடற்கரைக்குச் சென்று, பொங்கி வரும் அலைகளைக் கால்களால் அளைந்து விளையாடலாம்.

பௌர்ணமி அமாவாசை இரவுகளில் சென்னைவாசிகள் சமுத்திர ஸ்நானம் செய்ய வருவார்கள். ஆகவே அந்த நாட்களில் சகோதரியும் மிஸ் பிரேகரும் அந்த இளம் விதவைகளை எல்பின்ஸ்டன் சினிமாவுக்கு அழைத்துச் செல்வார்கள். அந்தச் சினிமா முதலாளி அந்த அபாக்கியசாலிகளை மகிழ்விக்கத் தம்மால் இயன்ற உதவிகளைச் செய்ய ஆவலாக இருந்தார். ஆனால் அவர் மிஸ் பிரேகருக்கு எல்லாப் படங்களையும் முதலில் போட்டுக் காட்டுவார். ஒவ்வொரு படத்திலும் அப்பெண்கள் பார்க்கத் தக்கவையல்ல என்று அவள் கருதிய பகுதிகளையெல்லாம் வெட்டி எடுத்துவிடவும் முன் வந்தார். பிறகுதான் அந்த விதவை யுவதிகளுக்குச் சினிமா காண்பிக்கப்படும்.

இலவசமாகப் போகப் பெண்கள் நினைக்கவில்லை. அவர்களில் ஒவ்வொருத்திக்கும் சர்க்காரால் அளிக்கப்பட்ட பதினைந்து ரூபாயில் பத்து ரூபாய்தான் வீட்டுச் செலவுக்காகச் சித்தி எடுத்துக் கொள்வாள். உலக யுத்தம் நீடிக்க, நீடிக்க விலைவாசிகள் ஏறிக் கொண்டே போயின. ஆயினும், எப்படியோ சித்தி அவர்களுக்கு வயிறாரச் சாப்பாடும் போட்டு, பண்டிகை தினங்களில் பட்சணங்களும் செய்து தந்தாள். தங்களுக்குத் தரப்பட்ட உபகாரத் தொகை

யில் மீதிப் பணத்தைத் தாங்களே வைத்துக் கொள்ள அனுமதிக்கப்பட்டார்கள். அவர்கள் அதைக் கண்டபடி செலவழித்தாலும் யாரும் தடுக்கவில்லை. தானே சம்பாதிக்க ஆரம்பிக்கும்போது சிக்கனமாக நடந்து கொள்ள இப்போது அவர்கள் செய்யும் தவறுகளே படிப்பினையாக அமையும்.

சில பெற்றோர்கள் தங்கள் பெண்களின் பராமரிப்புக்காகப் பணம் அனுப்பினார்கள். நாளடைவில் அப்பெண்களுக்குக் கிடைத்து வரும் உன்னதமான கல்வியைப் பற்றிக் கேள்வியுற்றுப் பல பெற்றோர்கள் தம் பெண்களைக் குறித்துச் சகோதரி சுப்புலக்ஷ்மியிடம் அபிப்பிராயம் கேட்க ஆரம்பித்தார்கள்.

இத்தகைய ஒருவர் சகோதரி முன்பின் பார்த்தறியாதவர். ஆனால் அவர் பெயர் மட்டும் பரிச்சயமாகி யிருந்தது. 1912ம் வருஷம் இந்தியன் சோஷல் ரிஃபார்மர் (Indian Social Reformer) என்னும் பம்பாய் வாரப் பத்திரிகை ஒன்றில் ஆதிகாட்டேஜில் பிராமண விதவைகள் விடுதி ஆரம்பமானதைக் குறித்துக் கட்டுரை ஒன்று வந்திருந்தது. அதே இதழில் தென்னிந்தியாவில் சமூகச் சீர்திருத்தத் திருமணம் ஒன்று நடந்ததாகவும் அதில் மணப் பெண் ஒரு விதவை என்றும் ஒரு செய்தி பிரசுரமாகியிருந்தது.

அந்தப் பெண்ணின் தந்தைதான் இப்போது சகோதரியைக் காண வந்திருந்தார். அவருடைய இரண்டாவது மாப்பிள்ளை ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்தவன். படித்தவன், பட்டதாரி. அவன் பெரிய அளவில் வரதட்சிணை கேட்டிருந்தான். அவரும் கொடுத்திருந்தார். அவனுடைய இளம் மனைவி அவனுடன் வாழச் சென்றதுமே பணத்துக்காகவேதான் அவளை அவன் மணந்தான் என்பது தெளிவாகிவிட்டது. விதவையாகிய அவளை மணக்கத் தான் முன் வந்ததே அவளுக்குக் கிடைத்த பெரும் பாக்கியமாகும் என்றும், தன்னுடைய இந்தத் தாராள மனப்பான்மைக்கு ஈடு செய்யும் விதத்தில் அவள் அவளுடைய தகப்பனாரைக் கெஞ்சிக் கேட்டு மேலும் மேலும் பணம் வாங்கிக் கொண்டு வர வேண்டியதுதான் என்றும், அவள் கடமை அது என்றும் அவன் அவளுக்கு எடுத்துரைத்தான். அவளும் அவ்வாறே செய்தாள். நாட்கள் செல்லச் செல்ல மாப்பிள்ளையின் பேராசையைத் திருப்தி செய்ய மாமனாரால் முடியவில்லை. உடனே கணவன் மனைவியைத் துன்புறுத்தவும், அவள் ஒரு விதவையாக இருந்தவள் என்பதைக் குத்திக் காட்டவும் சதா தொல்லை கொடுக்கவும் தொடங்கினான். இதையெல்லாம் பொறுக்க மாட்டாமல் அந்தப் பெண் தன் பெற்றோரிடம் திரும்பி வந்து விட்டாள். இப்போது அவளுக்கு வயது பதினேழு. படிப்பு வாசனையே கிடையாது. ஆனால் புத்தி கூர்மை இருந்தது. படித்துத் தொழில் புரிய அவளுக்கு ஆசை இருந்தது. பிராமண விதவைகள் விடுதியில் அவளுக்கு இடம் தர முடியுமா என்று அவள் தந்தை இப்போது சுப்புலக்ஷ்மியைக் கேட்டார்.

இல்லத்தில் இன்னும் ஒருத்திக்கு இடம் இல்லாமல் போகவில்லை. "சரி" என்று சொல்ல இஷ்டம்தான். ஆனால் இந்தப் பெண் இப்போது விதவை அல்லவே? இந்தக் காரணத்தினால் மறுத்துக் கூற வேண்டி யிருந்தது. இதற்குப் பதிலாக ஹாஸ்டலுடன் கூடிய வேறொரு பள்ளிக் கூடத்தில் அந்தப் பெண்ணைச் சேர்க்கலாம் என்று சகோதரி அபிப்பிராயம் கூறினாள்.

இந்த விஷயத்தைச் சகோதரி மிஸ் லின்ச்சிடமும் மிஸ் பிரேகரிடமும் சொன்னபோது அவ்விருவரும் விதவைகள் இல்லத்தில் பெண்களைச் சேர்த்துக் கொள்ளும் விஷயத்தில் சட்டங்களைச் சிறிது தளர்த்த வேண்டும் என்று ஒருமனதாக ஒப்புக் கொண்டார்கள். சில இளம் விதவைகளுக்குக் கல்யாணமாகாத தங்கைகள் இருந்தார்கள். ஹாஸ்டலில் அவர்களையும் தங்கச் செய்து படிக்க வைப்பதற்குப் பணம் செலவு செய்யச் சில பெற்றோர்கள் தயாராக இருந்தனர். இந்தப் பெண்கள் கிராமங்களிலேயே இருந்தால் சீக்கிரமே கல்யாணமாகிப் புருஷன் வீட்டுக்கு அனுப்பப்பட்டு விடுவார்கள்.

## அன்புத் தெய்வம்!

1960ம் வருடம், ஆகஸ்ட் மாதம், 7-ந் தேதி காலை பத்து மணிக்குச் சென்னை சர்க்கார் ஆஸ்பத்திரியில் பத்தாவது வார்டில் (துராசிக் கிளினிக்) 33-ம் நம்பர் படுக்கையில் நன்றாக உறங்கிக் கொண்டிருந்த என்னை, டாக்டர் சதாசிவம், டாக்டர் சீனிவாசன் இருவரும் தட்டி எழுப்பினார்கள். என் உடல் நிலையைப் பரிசோதித்துவிட்டு, ''கிருஷ்ணன், உனக்கு நாளை ஆபரேஷன். தைரியமாக இரு'' என்று கூறிப் பதிவு செய்துவிட்டுப் புறப்பட்டார்கள்.

அந்த வார்த்தையைக் கேட்டதும் என்னையும் அறியாமல் பயம் பற்றிக்கொண்டது. இருதயத்துக்குப் பக்கத்தில் இருக்கும் மகா தமனி, சிரை ஆகிய இரத்தக் குழாயின்மேல் ஆபரேஷன் செய்வது என்றால் எளிதான காரியமா? என் நோய்க்குப் பெயர் 'பி.டி.ஏ.' சென்ற வாரம் ஆபரேஷன் செய்து இரண்டு பேர் இறந்துவிட்டார்கள். நாளைக்கு நானும் அப்படித்தானே இறந்துவிடுவேன்? மதுரையிலிருந்து தன்னந் தனியாக வந்த நான் உதவிக்கு ஆள் இன்றி எப்படி ஆபரேஷன் செய்துகொள்ள முடியும்? ஆகவே ஆஸ்பத்திரியை விட்டு ஓடிவிட முடிவு செய்தேன்.

மாலை நான்கு மணிக்கு ஆஸ்பத்திரியின் மெயின் கேட்டு திறந்து கிடந்தது. என் பையை எடுத்துக் கொண்டு நோயாளி, நர்ஸ், யாருக்கும் தெரியாமல் வெளிப்புற 'மெயின் கேட்'டுக்கு வந்துவிட்டேன். அதைத் தாண்டுவதற்குள் என் கையைப் பட்டுப் போன்ற இரண்டு பூங்கரங்கள் இறுக்கிப் பிடித்தன.

# புத்தம் புதிய 'டூலக்ஸ்' ஆக்ரிலிக் எமல்ஷன் —

# வருங்கால வண்ணப்பூச்சான இதை இன்றே ஐ.ஸி.ஐ. வழங்குகிறது













டூலக்ஸ் ஆக்ரிலிக் எமல்ஷன் நிச்சயமாக நிலைத்து நீடிக்கவல்ல அலங்காரப் பூச்சாகும். முற்றிலும் புதிய முறைப்படி தயாராகும் இந்த கோபாலிமர் பூச்சு மிகவும் உறுதி உடையது. வெயிலில் காய்ந்தாலும் சரி, மழையில் நனைந்தாலும் சரிதான், நிறங்களின் அசல் செறிவோ அழகோ குறைவதேயில்லை. தண்ணீரால் சுத்தப்படுத்தக் கூடிய ''டூலக்ஸ்'' ஆக்ரிலிக் எமல்ஷனை ஒரு முறை பயன்படுத்தினால் போதும், மறு பூச்சு பற்றி நீண்ட நெடுங் காலத்திற்கு நினைக்கவே தேவையில்லை. ஏனெனில், இது உரிந்து உதிர்வதில்லை; வெடித்து விழுவதில்லை. மங்கி மறைவதுமில்லை. எனவே, உங்கள் வீடு புது மெருகு குன்றாமல் நீடித்து பொலிவது நிச்சயம்.

''டூலக்ஸ்'' ஆக்ரிலிக் எமல்ஷன்—சம்பிரதாய ஹோமோ பாலிமர் எமல்ஷன் பூச்சுகளை பழமையாக்கிய ஒரு புதிய பூச்சு.

மிக முன்னேறிய ஐ.ஸி.ஐ. ஆராய்ச்சியின் பயனான இந்த பூச்சு, இந்தியாவில் அதன் பிரத்தியேகத் தயாரிப்பாகும்

*தயாரிப்போர் :* ஆல்கலி அண்ட் கெமிகல் கார்ப்பரேஷன் ஆப் இந்தியா லிமிடெட்

*ஏகபோக விற்பனை ஏஜண்டுகள் :* ஐ.ஸி.ஐ. (இந்தியா) பிரைவேட் லிமிடெட்
கல்கத்தா பம்பாய் டில்லி சென்னை




IGC-549 TAM

# மருத்துவத் துறையில் ஒரு மேதை

**எ**ழுத்தாளன் ஒருவன் சிறந்த இலக்கியங்களைப் படைப்பதென்றால் அவனுக்கு வசதிகள் இருக்க வேண்டும், கவலைகள் இருக்கக்கூடாது என்பார்கள். இதற்கு நேர்மாறாக வறுமையில் உழன்று சிரமப்பட்ட எத்தனையோபேர் இலக்கியத் துறையில் மேதைகளாகப் பிரகாசிக்கக் கண்டிருக்கிறோம்.

ஆராய்ச்சித் துறையிலும் இவ்வாறேதான். திறமை மட்டும் ஒருவனுக்கு இருக்குமேயானால் அவனுடைய சூழ்நிலை எத்தகையதானாலும் அவனுக்கு எத்தனை துன்பங்கள் இடையூறுகள் ஏற்படுமேயானாலும் அவன் அறிவு ஒளிர்ந்து லட்சத்தில் ஒருவனாக அவனை விளங்கச் செய்யும். மேதை ஒருவனுக்கு எதிர்ப்பும் இடையூறுமே உற்சாகம் தரும் 'டானிக்'காக அமைந்துவிடும்.

இந்த உண்மைக்கு டாக்டர் பி. கே. துரைசாமி அவர்களின் வாழ்க்கை சான்று கூறுகிறது.

அவர் தகப்பனார் அவரை டாக்டருக்குப் படிக்கவைக்கவில்லை. ஆனாலும் என்ன? துரைசாமி தங்கியிருந்த விடுதியில் மருத்துவக் கல்லூரி மாணவர்கள் சிலர் இருந்தனர். அவர்களுடன் பழகியபோது துரைசாமியிடம் அதுவரை உறங்கிக் கிடந்த ஆராய்ச்சி மனப்பான்மை விழித்தெழுந்தது. மருத்துவத் துறை துரைசாமியைக் கவர்ந்திழுத்துக் கொண்டது. ஐ. ஸி. எஸ். பதவிக்குக் கொடுத்து வைத்தது அவ்வளவுதான்!

முதலில் சென்னை கிறிஸ்துவக் கல்லூரியிலும், பிறகு டாக்டர் பட்டத்துக்கும் படித்துத் தேர்ந்த துரைசாமி ஆராய்ச்சி புரியும் அவாவினால் உந்தப்பட்டவராகச் சில 'ஸ்காலர்ஷிப்பு'களை நாடிச் சென்றார். பல 'ஸ்காலர்ஷிப்பு'கள் இவரைத் தேடி வந்தன. கிடைத்த சந்தர்ப்பங்களை நன்கு பயன்படுத்திக்கொண்டு, உலகின் பல பாகங்களிலும் பல பல்கலைக் கழகங்களின் ஆதரவுடன் தமது ஆராய்ச்சிகளை நடத்தினர்



இவற்றில் மிக முக்கியமானது எலும்புக் கூட்டில் பிறவியிலேயே ஏற்படும் சில குறைபாடுகள், கோளாறுகள் பற்றியது. இந்த ஆராய்ச்சியின் முடிவுகள் எலும்புக் கோளாறுகளுக்கான சஸ்திர சிகிச்சையில் முன்னேற்றம் காண எவ்விதம் உதவுகின்றன என்பது பற்றியும் துரைசாமி தெளிந்து நோக்கினார்.

இம்மாதிரியான விஞ்ஞானப் பணியில் அவர் ஆழ்ந்திருக்கையில் பொறாமையினால் உந்தப்பட்டுச் சிலர் இவருக்கு இடையூறு விளைவிக்கப் பார்த்தனர். இவர் தமக்குச் சாதகமான ஒரு முடிவைக் காண்பதற்காகக் கற்பனைகளில் ஈடுபடுகிறார் என்றும், தவறான தகவல்களைத் தாமே தயாரித்துத் தருகிறார் என்றும் அவதூறு சுமத்தினார்கள். நாடு விட்டு நாடு சென்று இரவு பகலென்று பாராமல் மிருகங்கள் கூட வாழ லாயக்கற்ற ஒரு இடங்களில் சிரமங்களைப் பொருட்படுத்தாமல் ஆராய்ச்சியில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும் போது இப்படி வீண்பழி சுமத்தினால் ஒருவருக்கு எப்படி இருக்கும்? துரைசாமி மனம் தளர்ந்துவிடவில்லை. போராடினார். சுடச் சுட ஒளிரும் பொன் போல வெற்றிகரமாகப் பிரகாசித்தார்.

**தா**ய்நாடு திரும்பிய பிறகு மட்டுமென்ன வாழ்ந்தது? அமெரிக்காவில் மாதம் பத்தாயிரம் ரூபாய் சம்பளத்தில் இருந்த இவரை நேருஜியின் ஒரு வார்த்தை சுலபமாகத் தாய் நாட்டுக்கு அழைத்து வந்துவிட்டது. எனினும் இங்கே அவருக்குத் தகுந்த ஒரு வேலை கிடைப்பது குதிரைக் கொம்பாக இருந்தது! சிவப்பு நாடாவுக்குத் தகுதியும் திறமையும் பற்றியெல்லாம் என்ன அக்கறை? துரைசாமியின் அறிவாற்றல், மேதாவிலாசம் வீணாகிக் கொண்டிருந்தன. வட்டி யில்லாமல் நூறு ரூபாய் வைக்கப்பட்டிருந்தால் 'அடடா பாங்கில் போட்டிருந்தால் லாபமாயிற்றே' என்று நினைப்பவர் ஏராளம். ஆனால் பயன்படுத்தப்படாத அறிவு மூலதனத்தைப் பற்றிச் சிந்திப்போர் மிக மிகக் குறைவாக உள்ள இந்தத் தேசத்தில் துரைசாமி அல்லல்பட்டதில் வியப்பில்லை.

அந்தச் சமயத்தில் இத்தகைய துரதிர்ஷ்டமான நிலையை வன்மையாகக் கண்டித்துத் திரு காஸா சுப்பாராவ் அவர்கள் 'சுதந்திரா' பத்திரிகையில் ஓர் அருமையான கட்டுரை எழுதினார். அது நேருஜி அவர்களின் பார்வைக்கு வந்த பிறகுதான் டாக்டர் துரைசாமி அவர்களுக்கு புதுதில்லி ஸப்தர்ஜங் ஆஸ்பத்திரியில் பணிபுரிய வாய்ப்புக் கிட்டியது. தமது துறையில் விசேஷ கவனம் செலுத்தித் தளராமல் பாடுபட்டார். இன்று ஸப்தர்ஜங் ஆஸ்பத்திரியில் எலும்புச் சிகிச்சைக்கென்று ஒரு தனி மாடிக் கட்டிடமே எழச் செய்திருக்கிறார்.

இவ்விதம் துரைசாமிக்கு அவரது வாழ்க்கையில் ஏற்பட்ட பல இடையூறுகள் இன்னல்கள் அனைத்திலும் பங்கு கொண்டு அவரது திறமையிலும் இறுதி வெற்றியிலும் அசைக்க முடியாத நம்பிக்கை வைத்து அவருக்குப் பக்கபலமாக நிற்க ஸ்ரீமதி கல்யாணி அம்மையார் அருமையான வாழ்க்கைத் துணைவியாக அகப்பட்டது அவரது அதிர்ஷ்டம்.

டாக்டர் துரைசாமி எல்லோரிடமும் பெரியவர், சிறியவர், அறிஞர், எளியவர் என்ற வித்தியாசமின்றி அவரவர்களுக்கு ஏற்ற விதத்தில் சம்பாஷிப்பார். எலும்புச் சிகிச்சை பற்றிய நுண்ணிய விஞ்ஞான உண்மைகளைப் பற்றி டாக்டர்கள் பலர் முன்னிலையில் பேருரை நிகழ்த்திய கையோடு, சரியாக நடக்க முடியாமல் சிரமப்படும் ஒரு குழந்தையின் தாய்க்கு ஆறுதல் வார்த்தைகள் கூறும் அழகையும் கேட்டால் சொக்கிப் போய்விடுவோம்.

டாக்டர் துரைசாமி ஏற்றுள்ள பட்டங்கள் பரிசுகள், சென்ற நாடுகள், நடத்திய ஆராய்ச்சிகள், வகித்த பதவிகள், எழுதிய நூல்கள், அடைந்த ஃபெல்லோஷிப்புகள் ஆகியவற்றின் பட்டியலை நோக்கினாலே நமக்குத் தலையைச் சுற்றும். ஆனால் இவற்றில் குறிப்பாகச் சில இவரது அபார ஞானத்துக்குச் சான்று பகர்கின்றனவாக இருப்பதைச் சொல்லவேண்டும்.

லிவர்பூல் (பிரிட்டன்) சர்வகலாசாலையில் எலும்புச் சிகிச்சைக்கான ஆராய்ச்சிப் பணிக்கு முதன் முதலாக 1951ல்தான் ஒரு பி. எச்டி. தரப்பட்டது. அது துரைசாமிக்கே கிடைத்தது. அதன் பிறகு இதுவரை இந்தப் பட்டம் வேறு யாருக்கும் தரப்படவில்லை!

ராபர்ட் ஜோன்ஸ் தங்க மெடல் கடந்த முப்பது வருடங்களில் பத்து தடவைகளில் தான் தரப்பட்டுள்ளது. கடைசியாக அது துரைசாமிக்குக் கிடைத்தது. ஓர் இந்தியருக்குத் தரப்பட்டது அதுவே முதல்தடவை.

அமெரிக்காவில் இத்துறையில் மிகப் பெரிய கௌரவமான காப்பா—டெல்டா பரிசு இவர் ஓர் அமெரிக்கர் அல்ல என்ற ஒரே காரணத்துக்காகக் கொடுக்கப்பட முடியாமல் போயிற்று. இந்த விதி முறைகளை மாற்றி அமைக்க முடியுமா என்றுகூட சம்பந்தப்பட்டவர்கள் யோசிக்க ஆரம்பித்து விட்டனர் என்றால் துரைசாமியிடம் அவர்கள் எவ்வளவு மதிப்பு வைத்திருந்தார்கள் என்பது புரியும்.

இவ்விதமாக இவர் ஏதோ பட்டங்கள், பரிசுகள் பெற்றார் என்பதாக இல்லாமல் அவற்றில் பல இவரது விசேஷத் தகுதியை விண்டு சொல்லும் ஓர் உண்மைக் கதையை உள்ளடக்கிக் கொண்டு இவரை வந்தடைந்துள்ளன.

சமீபத்தில் இவர் பெற்றுள்ள பத்மபூஷண் பட்டத்துக்கும் இப்படி ஒரு 'கதை' சொல்லலாம். சாதாரணமாக டாக்டர்கள், வக்கீல்கள் போன்றோருக்கு அவர்களது படிப்பு ஆராய்ச்சி இவை சம்பந்தப்பட்ட சர்வகலாசாலைப் பட்டங்கள் பலவற்றை அவர்கள் தாங்கி நிற்பினும் கூட, அரசினர் விருது அளித்துக் கௌரவிக்கும் வழக்கம் இல்லை. அவர்களுடைய 'பிராக்டிஸ்' முடிந்து ஓய்வெடுத்துக் கொண்டதற்கு அப்புறமோ அல்லது அவர்கள் மறைவுக்குப் பிறகோதான் கொடுப்பார்கள்.

இதற்கு விதி விலக்காகத் தொழில் செய்து கொண்டிருக்கும்போதே டாக்டர் துரைசாமி பத்மபூஷண் விருது பெற்றிருக்கிறாரென்றால் அவரது சேவை இந்நாட்டின் மதிப்பையே உலகின்கண் உயர்த்திவிட்டதைப் பாரத சர்க்கார் இன்று உணர்ந்ததுதான் காரணம் என்று நாம் எண்ணலாம் அல்லவா?

இன்று டில்லியில் அயல் நாட்டிலிருந்து எலும்புச் சிகிச்சை நிபுணர்கள் பலர் வந்து துரைசாமியிடம் பணியாற்றி மேலும் சிறந்த பயிற்சி பெற்றுத் திரும்புகிறார்கள்.

டாக்டர் துரைசாமியைப் பற்றி நம்மைப் போன்றவர்கள் என்னதான் சொன்னாலும் வசிஷ்டர் வாயால் பிரும்மரிஷி என்றால் தானே இன்றைக்கும் மதிப்பு? அமெரிக்காவில் உள்ள ஜான் ஹாப்கின்ஸ் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த எலும்புச் சிகிச்சை நிபுணரும் மருத்துவக் கல்லூரிப் பேராசிரியருமான ராபர்ட் ஜான்ஸன் பின்வருமாறு துரைசாமிக்கு மார்க் போடுகிறார்!

அறிவாற்றல், விஞ்ஞான ஆராய்ச்சியில் திறமை: 100 சதவிகிதம்.

நேர்மை — சொந்த வாழ்க்கையிலும் விஞ்ஞான ஆராய்ச்சியிலும் நூறு சதவிகிதம்.

டாக்டர்களுக்கு உயர் கல்வி போதிக்கும் ஆற்றல் 90 முதல் 100 சதவிகிதம்.

உழைப்பு — உழைப்பதற்கான சக்தி 100 சதவிகிதம்.

விஞ்ஞான ரீதியான நட்புறவுகள் விஞ்ஞான ரீதியான அஸ்திவாரம் 95 முதல் 100 சதவிகிதம்வரை.

சமூகத் தொடர்புகள் 90 முதல் 100 சதவிகிதம்.

இப்படி எல்லாவற்றிலும் நூறுக்கு நூறு மார்க் வாங்குகிற துரைசாமி பற்றி ராபர்ட் ஜான்ஸன் மேலும் கூறுகிறார்: லிவர்பூலிலிருந்து அவர் இங்கு வந்தபோது கொண்டு வந்த ஆராய்ச்சி பூர்வமான அறிவு ஒருபுறமிருக்க, இங்கு அவர் செய்துள்ள ஆராய்ச்சிகளும் கண்டுள்ள முடிவுகளுமே பத்துத் தலைமுறைகளில் சாதிக்கப்பட வேண்டியவை!

மேல் நாட்டினர் மட்டுமின்றி நம் நாட்டு அறிஞர்களும் அவரைப் போற்றிப் பாராட்டியுள்ளனர். திரு எச். வி. ஆர். ஐயங்கார் போன்றவர்கள் டாக்டர் துரைசாமியின் தியாகத்தைப் புகழ்ந்துள்ளனர் என்பதும் திரு கே. பி. எஸ். மேனன் தமது பல உலகங்கள் (Many Worlds) என்ற சுய சரித்திரத்தில் இவருடைய உலகப் புகழ் பெற்ற சேவையைப் பாராட்டிக் கூறுகிறார் என்பதும் மிகைப்படுத்திய உரைகள் அல்ல என்றே நாம் கொள்ள வேண்டும்.

துரைசாமியின் மேதாவிலாசம் குறித்து இன்னும் யோசிக்கிற சந்தேகப் பிராணிகள் யாரேனும் உண்டானால் அவர்கள் உடனே புதுதில்லிக்குப் போகட்டும். தினம் தினம் அவரைக் காண வரும் நோயாளிகளின் கூட்டத்தைப் பார்க்கட்டும். கடந்த பத்து வருஷங்களில் பத்து மடங்குக்கும் அதிகமாகப் பெருகியிருக்கிறது ஆண்டுதோறும் அவரிடம் புதிதாகச் சிகிச்சைக்கு வரும் நோயாளிகளின் எண்ணிக்கை!

அநேகமாக மேதைகளின் வாரிசுகள் சுடர் விட்டுப் பிரகாசிப்பது அபூர்வம். டாக்டர் துரைசாமியின் புதல்வி ஸ்ரீமதி டாக்டர் இந்திரா நாராயண் எம். பி. பி. எஸ். பட்டத்துக்கான பன்னிரண்டு பரிசுகளில் பதினொன்றைத் தானே அடைந்து பெரும் புகழ் பெற்றாள். வைத்தியக் கல்லூரி 'பிரஸிடெண்ட் மெடலு'ம் இவருக்குத்தான் கிடைத்தது. வழிவழியாக மருத்துவக் கல்விச் செல்வம் குறைவற்று அமைவது அரிதிலும் அரிதல்லவா!

பல்லாயிரக் கணக்கானோர்க்குப் புனர் வாழ்வு அளிக்கும் டாக்டர் துரைசாமியின் பணி சிறக்கட்டும். எலும்புச் சிகிச்சைத் துறையில் அவர் புரிந்துள்ள அற்புதங்கள் இனி செய்யவிருக்கிற ஆராய்ச்சிகள் அவருக்கும் பாரதத்துக்கும் பெரும் புகழும் பெருமையும் தேடித் தரட்டும்.

பத்மபூஷண் துரைசாமி அவர்களை இதய பூர்வமாக வாழ்த்துகிறோம்.

---



அடுத்த இதழில் — நவரஸ நிகழ்ச்சிகள்

## சாந்தத்தின் விலை என்ன?

கர்நாடக சங்கீதத்தில் புதிய பாணிகள்

—முசிரி சுப்பிரமணிய அய்யர் பேட்டி

**இனிய தமிழ் புத்தகங்களை படித்து**
**அனுபவிக்க இதோ ஓர் அரிய வாய்ப்பு !**

# உங்கள் வீட்டிலேயே உங்களுக்குச் சொந்தமாக ஓர் நேர்த்தியான "வீட்டு நூலகம்" அமைக்க

தென் மொழிப் புத்தக டிரஸ்ட்
25, ஸ்டர்லிங் ரோடு, சென்னை-34




SOUTHERN LANGUAGES
BOOK TRUST

# அளிக்கும் திட்டம்

## முதலீடு மாதம் ரூபாய் 5-00 மட்டுமே!

18 மாதங்களில் ரூ. 90.00 மதிப்புள்ள நீங்களே இஷ்டப்பட்டு தேர்ந்தெடுத்த அரிய பல தமிழ் நூல்களும் மற்றும் ரூ. 20.00 மதிப்புள்ள 12 பரிசு நூல்களும் அடங்கிய அழகிய நூலகம் உருவாகிவிடும்.

### இத் திட்டத்தின் சீரிய அம்சங்கள் :

* சிக்கல்கள் அற்ற சுலபமான வழி.
* வேண்டிய புத்தகங்களை தேர்ந்தெடுக்க உதவியாக 75க்கு மேற்பட்ட புத்தகப் பதிப்பாளர்களின் பல அரிய புத்தகங்களின் பட்டியல் இலவசமாக தரப்படுகிறது. சென்னை வாசிகள் டிரஸ்டின் அலுவலகத்திற்கு நேரில் விஜயம் செய்தும் வேண்டிய புத்தகங்களை தேர்ந்தெடுக்கலாம்.
* நாவல், நாடகம், வரலாறு, சரித்திரம், சமயம், விஞ்ஞானம், இலக்கியம், ஓவியம், காவியம் சிறுவர் இலக்கியம் போன்ற எல்லாவித புத்தகங்களும் உள்ளன.
* திட்டத்தில் சேரும் நேயர் மாதச் சந்தாவான ரூபாய் ஐந்தைத்தவிர தபால் செலவு போன்ற எவ்விதச் செலவையும் ஏற்கவேண்டாம்.
* டிரஸ்டின் மாத வெளியீடான "புத்தக நண்பன்" என்னும் சஞ்சிகைப் பிரதி ஒன்று அங்கத்தினர்களுக்கு ஒவ்வொரு மாதமும் இலவசமாக அனுப்பப்படுகிறது.
* 18 மாதங்களில் 12 பரிசுப் புத்தகங்களும் கிடைக்கின்றன.

கீழே கொடுத்துள்ள திட்ட விவரங்களை படித்து உடனே அங்கத்தினராக சேருங்கள்.

1. முதல் மாத சந்தாவான ரூ. 5.00 தென் மொழிப் புத்தக டிரஸ்டாருக்கு கிடைத்தவுடன் சந்தாதார் இத் திட்டத்தின் அங்கத்தினராகப் பதிவு செய்யப்பட்டு அவருக்கு கீழே கண்டவை தபால் மூலம் அனுப்பப்படும் :
   a) பதிவு செய்யப்பட்ட அங்கத்தினர் என்ற ஒரு சீட்டு.
   b) பரிசு புத்தகங்கள் மூன்று. (விளம்பரத்தில் காட்டியுள்ள 8 புத்தகங்களிலிருந்து நீங்கள் தேர்ந்தெடுக்கும் 3 புத்தகங்கள்).
   c) ஒரு பெரிய புத்தகப் பட்டியல்.
   d) டிரஸ்டின் மாதவெளியீடான "புத்தக நண்பன்" என்ற சஞ்சிகையின் பிரதி ஒன்று. (இப் பிரதி தொடர்ந்து ஒவ்வொரு மாதமும் இலவசமாக அனுப்பப்படும்.)
2. 6 மாத சந்தா தொகை செலுத்திய பிறகு அங்கத்தினர்களுக்கு டிரஸ்டார் கீழ்க்கண்டவைகளை அனுப்புவார்கள் :
   a) ரூ. 25.00 மதிப்புள்ள புத்தகங்கள்.
   b) பரிசு புத்தகங்கள் மூன்று.

   மேற்கண்டவைகளைப் பெற, அங்கத்தினர்கள் ஏற்கனவே பெற்ற புத்தகப் பட்டியலிலிருந்து சுமார் ரூ. 75-00 மதிப்புள்ள புத்தகங்களைப் பொறுக்கி அதோடு பரிசுப் புத்தகங்கள் லிஸ்டிலிருந்து தனக்கு விருப்பமான 3 புத்தகங்களையும் குறிப்பிட்டு டிரஸ்டுக்கு தெரிவிக்க வேண்டும். இத் தகவல் கிடைத்தவுடன் டிரஸ்டார் ரூ. 25.00 மதிப்புள்ள புத்தகங்களும் 3 பரிசு புத்தகங்களும் அங்கத்தினருக்கு எவ்வித செலவுமின்றி அனுப்பி வைப்பார்கள்.
3. 12 மாத சந்தா செலுத்திய பிறகு அங்கத்தினருக்கு டிரஸ்டார் மறுபடியும் ரூ. 30-00 மதிப்புள்ள அங்கத்தினரே தேர்ந்தெடுத்த புத்தகங்களும், மேலும் 3 பரிசு புத்தகங்களும் அனுப்பி வைப்பார்கள். இவைகளைப் பெற அங்கத்தினர் மேற்சொன்னபடி செய்யவேண்டும்.

4. 18 மாத சந்தா தொகை முழுவதும் செலுத்திய பிறகு அங்கத்தினருக்கு மேலும் ரூ. 35.00 மதிப்புள்ள புத்தகங்களையும், 3 பரிசு புத்தகங்களையும் டிரஸ்டார் அனுப்பி வைப்பார்கள். இவைகளைப் பெற அங்கத்தினர் முன் செய்ததுபோல் செய்யவேண்டும்.

5. 18 மாதங்களுக்கும் சந்தா செலுத்த முடியாமற்போன அங்கத்தினர்களுக்கு, அவர்கள் செலுத்திய தொகையளவு மதிப்புள்ள புத்தகங்கள் அனுப்பப்படும். இவ்வங்கத்தினர்கள் புத்தகங்களுக்கான பாக்கிங் மற்றும் தபால் செலவையும் ஏற்கவேண்டும்.

**இத் திட்டத்தில் சேர்ந்து 18 மாதங்களும் சந்தா செலுத்தும் அங்கத்தினர் அடையும் லாபம் என்ன?**

| | | | |
|---|---|---|---|
| i) அங்கத்தினர் தேர்ந்தெடுக்கும் புத்தகங்களின் மொத்த மதிப்பு | ... | ரூ. | 90.00 |
| ii) 12 பரிசு புத்தகங்களின் மதிப்பு | ... | ரூ. | 20.00 |
| iii) இலவசமாகப் பெறும் புத்தகப் பட்டியலின் மதிப்பு | ... | ரூ. | 1.00 |
| iv) இலவசமாகப்பெறும் ''புத்தக நண்பன்'' 18 பிரதிகளின் மதிப்பு | ... | ரூ. | 9.00 |
| v) பாக்கிங், தபால் செலவு இலவசம் | ... | ரூ. | 10.00 |
| | | ரூ. | 130.00 |
| அங்கத்தினர் செலுத்தும்தொகை | | ரூ. | 90.00 |
| அங்கத்தினர் அடையும் லாபம் | | ரூ. | 40.00 |

**முதல் மாத சந்தா கட்டியவுடன் பரிசாக கொடுக்கப்படும் புத்தகங்கள் :**


பனிப்படலத்துப் பாவை


ஆரம்ப நீதி மாலை


தாயார் கொடுத்த தனம்


நிலம் தரும் செல்வம்


ரதோத்சவம்


நாகரிகச் சிற்பிகள்


பெரும் புகழும்


வாழ்வதற்கு வழி

**கீழ்க்கண்ட கூபனை உடனே பூர்த்தி செய்து அனுப்பி அங்கத்தினர் ஆகுங்கள் :**

## தென் மொழிப் புத்தக டிரஸ்ட்
**25, ஸ்டர்லிங் ரோடு, சென்னை-34**

ஐயா,

''வீட்டு நூலகம்'' அமைக்கும் உங்கள் திட்டத்தில், அதன் நிபந்தனைகளுக்குட்பட்டு, அங்கத்தினராக சேர விரும்புகிறேன். இதற்கான முதல்மாத சந்தாவான ரூ. 5.00 மணியாடர் மூலம் அனுப்பியுள்ளேன். விளம்பரத்தில் காட்டியுள்ள எட்டு பரிசு புத்தகங்களில் எனக்குப் பிடித்த மூன்று புத்தகங்களின் பெயர்களை கீழே கொடுத்துள்ளேன்.

1
2
3

பெயர் ..........................................

ஊர் : .......................... கையொப்பம் ..........................................

தேதி : .......................... முழு விலாசம் ..........................................

..........................................

*குறிப்பு : சந்தா தொகை எப்பொழுதும் மணியாடர் மூலம் தான் அனுப்பப்பட வேண்டும். சென்னையில் வசிக்கும் அங்கத்தினர் சந்தா தொகையை டிரஸ்டின் அலுவலகத்தில் நேரில் கட்டி ரசீது பெற்றுக் கொள்ளலாம்.

1966, மார்ச் 10ந் தேதிக்குள் அங்கத்தினராக சேருவோருக்கு அதிகப்படியாக ஒரு பரிசு புத்தகம் அளிக்கப்படும்.

WENSONS 1/SLB-1 TAM

## அத்தியாயம் முப்பத்தாறு

# சத்தியக் குரல்

மறுநாள் வரை பொறுத்திருக்காமல் உடனுக்குடன் விரைந்து சென்றான் விசுவநாதன். அங்கே அவனால் சக்கரவர்த்தியைச் சந்திக்க முடியவில்லை. அவர் சந்திரசேகர பாண்டியருடன் தனித்திருப்பதால் அவரை அப்போது காண முடியாது என்று கூறினார் ராமராயர். அவருக்கே விவரம் ஒன்றும் தெரியவில்லை. அவர் விசுவநாதனைப் பார்த்த பார்வையில் சந்தேகம் தெரிந்தது.

பிறகு அவன் நேரே சாளுவ நரசிம்மரின் மாளிகைக்குத் திரும்பி வந்தான். வெளி வாயிலில் அமர நாயக்கர்கள் பலரின் சிவிகைகள் காத்திருந்தன. அந்தக் குறுகிய காலத்துக்குள் அவர் எப்படி அங்கே அவர்களைக் கூட்டினார் என்பது அவனுக்கு வியப்பாக இருந்தது. உள்ளே நுழையாமல் தன்னுடைய மாளிகைக்குத் திரும்பி வந்துவிட்டான்.

ஏதோ விபரீதம் நடக்கத் தொடங்கி விட்டது என்ற வரையிலும் அவனுக்குப் புரிந்தது. அதற்கும் தன் தந்தைக்கும் சம்பந்தம் உண்டு என்பதையும் அவன் ஊகித்துக் கொண்டான். அடுத்தாற்போல் அரியநாத முதலியாருக்கு ஆள் அனுப்பி அவரை வரவழைத்தான். அவராலும் ஏதும் கூற முடியவில்லை. ராமபத்திர நாயக்கர் விஜயநகரத்துக்கு வந்திருந்தார் என்ற செய்தியை மட்டும் அவர் கூறினார்.

மறுநாள் சபை தொடங்குவதற்கு முன்னதாகவே அமர நாயக்கர்கள் பலரும் அரண்மனைக்கு வந்து குழுமி விட்டனர். அவர்களுடைய பார்வை அடிக்கடி விசுவநாதன் மேல் திரும்பியது. அவனைப் பார்த்து அவர்கள் தங்களுக்குள் ஏதோ பேசிக் கொண்டனர். கடைசியாக வந்து சேர்ந்த சாளுவ நரசிம்மர் விசுவநாதனைத் தனியே அழைத்துச் சென்று, "நாகம நாயக்கரின் சார்பில் நிற்கும்படி நான் அமரநாயக்கர்களைக் கேட்டுக் கொண்டிருக்கிறேன்; அவர்கள் எப்படி நடந்து கொள்ளுகிறார்களோ அதேபோல் நீயும் நடந்து கொண்டால் போதும்" என்றார்.

"என்ன நடந்திருக்கிறது?"

"பாண்டியர் நேரில் உன் அப்பாவின் மீது குற்றம் சாட்ட வந்திருக்கிறார். உன் அப்பா அதற்கு மறுப்புச் சொல்லி அவர் சார்பில் ராமபத்திர நாயக்கரை அனுப்பியிருக்கிறார்."

"நாட்டை இப்போதுகூட அவர் பாண்டியரிடம் விடவில்லையா?"

"ஏன் விடவில்லை என்பதைத் தெரிவிக்கத்தான் ஆள் அனுப்பியிருக்கிறார்."

விசுவநாதனின் நெஞ்சு படபடத்தது. என்றுமே அவன் கண்டிராத ஒரு நிகழ்ச்சி அது. சக்கரவர்த்தியின் நேரடிக் கட்டளையை அதுவரையில் யாருமே மீறி அவன் கண்டதில்லை. சக்கரவர்த்தி அதற்காக அவ்வளவு அவசரமாகச் சபை கூட்டியதிலிருந்து அவர் எவ்வளவு தூரம் புண்பட்டிருப்பார் என்பதையும் உணர்ந்து கொண்டான்.

சபை கூடியது. கிருஷ்ணதேவராயரும் ராமராயரின் துணையோடு சபைக்கு வந்து ஆசனத்தில் அமர்ந்தார். அங்கே பாண்டியர் ஒருபுறமும் ராமபத்திர நாயக்கர் மறுபுறமும் பணிவோடு வந்து வணங்கி நின்றார்கள். அவர்களை அமரச் சொல்லி விட்டுச் சபைக்கு வந்திருந்த அனைவரையும் உற்றுப் பார்த்தார் சக்கரவர்த்தி. விசுவநாதனின் மீது அவர் பார்வை பதிந்த போது அதில் வழக்கத்துக்கு மாறான கடுமை தென்பட்டது.

பிறகு அவர் பேசலானார்:

"பாண்டிய நாட்டில் கலகம் விளைவித்து அதன் ஆட்சியைச் சந்திரசேகர பாண்டியரிடமிருந்து கைப்பற்றிக் கொண்



டான் வீர சோழன். நம்மால் சரிவரக் கவனிக் கப்படாமலிருந்த நம் சாம்ராஜ்யத்தின் தென் பகுதிக்கு நாம் நாகம நாயக்கரைப் படைக ளோடு அனுப்பி வைத்தோம். நாட்டை மீட் டுப் பாண்டியரிடம் கொடுத்து விடும்படி அவ ருக்குக் கட்டளை இட்டோம். நாட்டை அவர் இப்போது வீர சோழனிடமிருந்து கைப் பற்றித் தாமே ஆளத் தொடங்கிவிட்டார். நம்முடைய ஆணைகள் மீறப்பட்டிருக்கின் றன. அது பற்றி இப்போதே நாம் முடிவு செய்தாக வேண்டும்.''

யாரும் எதுவும் பதில் அளிக்கவில்லை. அச்சுத ராயர் மெல்ல எழுந்து நின்றார்.

''என்ன?'' என்று கர்ஜித்தார் கிருஷ்ண தேவராயர்.

''நாகம நாயக்கர் காரணமில்லாமல் ஏதும் செய்திருக்க மாட்டார். சக்கரவர்த்திகளுக் காகவும் சாம்ராஜ்யத்துக்காகவும் அவர் எவ்வளவோ தியாகங்களைச் செய்திருக்கிறார்'' என்றார் அச்சுத ராயர்.

''சந்திரசேகர பாண்டியரிடம் ஆட்சி யைக் கொடுத்தால் மீண்டும் நாட்டில் கல வரங்கள் தோன்றும் என்று குறிப்பிட்டிருக் கிறார். பாண்டியருக்கு எதிராகப் பரமக் குடியில் தும்பிச்சி நாயக்கரும் கயத்தாற்றில் சில பாண்டியர்களும் போர் தொடுக்கச் சித்தமாக இருக்கிறார்களாம். மேலும் போருக்காக நாகம நாயக்கர் செலவு செய்த கைப்பொருள் இன்னும் அவருக்கு வந்து சேரவில்லையாம். ஆகவே பாண்டிய நாடு தம் ஆட்சியில் இருக்க வேண்டுமென்று ஓலை அனுப்பியிருக்கிறார் நாயக்கர்.''

''ஒருவேளை நாகமர் கூறுவதிலும் நியாயம் இருக்கலாம்'' என்றார் அச்சுதராயர்.

கிருஷ்ணதேவராயரின் விழிகள் சிவந்தன. அமரநாயக்கர்களின் மத்தியில் அவர் மேலும் இதை விவாதிக்க விரும்பவில்லை. பலர் சேர்ந்து ஏதும் பேசிக் கொண்டு வந்திருக்க வேண்டுமென்பது அவர்களுடைய முகத் தோற்றங்களிலிருந்து சக்கரவர்த்திக்கு நன்றாக விளங்கி விட்டது.

''காரணங்கள் மெய்யா பொய்யா என்ற ஆராய்ச்சி ஒருபுறம் இருக்கட்டும். ஆணை மீறப்பட்டிருக்கிறது. நம்முடைய ஆணைப் படி நம்முடைய அதிகாரியான நாகம நாயக் கர் நடக்கவில்லை! ஆணைப்படி அவர் நடந்து, அதன் பிறகு பாண்டிய நாட்டில் தவறுகள் நடந்தால், அதை நாம் கவனித்துக்கொள் வோம். ஆகவே நாகம நாயக்கர் கூறும் கார ணங்கள் உண்மையாகவே இருந்தாலும், அவர் ஆணை மீறி நடந்திருப்பதை நாம் ஏற்றுக் கொள்ள முடியாது.''

சக்கரவர்த்தி சிறிது நேரம் மௌனமாக இருந்து விட்டு, மேலே கூறினார்:

''உங்களில் யாராவது மதுரைக்குப் படை நடத்திச் செல்ல வேண்டும். நாகம நாயக் கரைச் சிறைபிடித்து உயிருடன் கொண்டு வந் தாலும் சரி; அல்லது அவரைக் கொன்றுவிட்டு வந்தாலும் சரி. பாண்டிய நாடு பாண்டிய ரிடமே ஒப்படைக்கப்பட வேண்டும்!''

அனைவருமே திடுக்கிட்டனர். விசுவநாதன் முதன் முறையாக அன்று சபையில் தலை குனிந்தான்.

''மதுரைக்குப் படை நடத்திச் செல்ல யாருக்கு விருப்பம் இருக்கிறது? யார் முன் வருகிறீர்கள்?'' என்று கேட்டார் கிருஷ்ண தேவராயர்.

வேறு எங்கும் படை நடத்திச் செல்ல தென்றால் அங்கு கூடியிருந்த ஒவ்வொரு வருமே முன்வந்திருப்பார்கள். நாகம நாயக் கரைத் தவிர வேறு யார் மீதும் போர் தொடுப்பதென்றால் அவர்கள் தயங்கியிருக் கவே மாட்டார்கள். சாளுவ நரசிம்மருக்கு ஒப்பான நிலையில் தளநிகாரியாக அங்கு இருந்தவர் நாகம நாயக்கர். அவர்களில் ஒருவர் என்ற உணர்வும் மற்ற அமரநாயக்கர் களைச் சிந்திக்க வைத்தது. அதோடு, நாகம நாயக்கரின் வீரமும் அவர்களை அஞ்ச வைத்ததென்றே சொல்ல வேண்டும்.

இந்த எல்லாக் காரணங்களையும்விட மற் றொரு முக்கியமான காரணமும் இருந்தது. அமைச்சர் சாளுவ நரசிம்மர் அவர்களிடம் முதல் நாள் இரவே கூறி வைத்திருந்தார்.

ஒவ்வொருவர் முகமாக உற்றுப் பார்த்துக் கொண்டே வந்தார் சக்கரவர்த்தி. வேதனை கலந்த வியப்பு அவருக்கு. இராம ராயர் மட்டிலும் எழுந்து நின்று, ''சக்கரவர்த்திகள் யாராவது ஒருவரைக் குறிப்பிட்டு ஆணை யிட்டால் எங்களில் யாராவது போகிறோம்!'' என்றார்; ''எனக்கு ஆணை பிறந்தால் நானே போகிறேன்.''

''நான் ஆணையிடாவிட்டால் யாருமே போக மாட்டீர்கள் போலிருக்கிறது. வெளிப் பகையை வெல்லத் துடிப்பதில் காணப்படு கிற உற்சாகம் உட்பகையை ஒடுக்குவதில் காணோமே? நீங்கள் எல்லோரும் கூடிப் பேசிக் கொண்டு வந்திருப்பீர்களென்று நினைக் கிறேன்....''

அதுவரையில் குனிந்த தலை நிமிராமல் ஒரு மூலையில் அமர்ந்திருந்த விசுவநாதன் மெல்ல எழுந்தான். சக்கரவர்த்தி திடுக்கிட்டார். சபையில் பெரியதொரு பரபரப்பு ஏற் பட்டது. அனைவரது விழிகளும் விசுவநாதன் மேல் பதிந்தன.

''நான்...நான்...மதுரைக்குப் படை எடுத் துச் சென்று சக்கரவர்த்திகளின் ஆணையை நிறைவேற்றுகிறேன்'' என்று துக்கம் தொண்டையை அடைக்கக் கூறினான் விசுவ நாதன். தலைநிமிர்ந்து சக்கரவர்த்தியை நோக் கும் துணிவு அவனுக்கு இன்னும் பிறக்க வில்லை.

''விசுவநாதா!'' — சக்கரவர்த்தி தம்மை மறந்து கூவினார்.

''சக்கரவர்த்திகள் என்னை நம்ப வேண் டும்'' என்று அவன் கேட்டுக் கொண்ட போது அவனுடைய நாத் தழுதழுத்தது. ''ஆணைப்படி படையெடுத்துச் சென்று, ஆணை மீறியவரைக் கொன்று வருகிறேன்; அல்லது சிறைப்பிடித்து வருகிறேன்.''

சபை மூச்சு விடவும் மறந்து அவனைக் கவனித்துக் கொண்டிருந்தது. சபையிலிருந்த வர்கள் சிலர் விசுவநாதனின் மனம் நோகக் கூடாதே என்பதற்காகப் பேசாதிருந்தவர்கள் அவர்களுக்கு அவன் தந்தையிடம் எவ்வளவு

## பகல் இரவு பாராமல்

மாடல் 5-A 46
6 டியூப் 4-பாண்ட்
ஏஸி செட்
பலவித சுரம் கட்டுப்பாடு
ரூ. 350
உற்பத்திவரி ரூ. 40.
வரி தனி



மாடல் BZ-400
(Portable Set)
8-டிரான்ஸிஸ்டர் 4-பாண்ட்
நுட்பமான ஒலியமைவுகள்
ரூ. 375
உற்பத்திவரி ரூ. 40.
வரி தனி







மாடல் BXS-338
(Portable Set)
8-டிரான்ஸிஸ்டர் 2-பாண்ட்
சுரம் கட்டுப்பாடு
ரூ. 225
உற்பத்திவரி ரூ. 20
வரி தனி

மாடல்-7A 67
2 சுரம் கட்டுப்பாடுகள்
5.பாண்ட் 7-டியூப்
3 ஒலிபெருக்கி ஹைபிடிலிட்டி
ரூ. 575 ஏஸி
உற்பத்திவரி ரூ. 93.84
வரி தனி

## ஷார்ப் ரேடியோ உங்கள் வாழ்க்கைக்கு இன்ப மூட்டுகிறது

சக்திவாய்ந்த, நம்பகமான ஷார்ப் ரேடியோக்கள் எல்லா குடும்பத்தினராலும் விரும்பி வாங்கப்படுகிறது. ஒவ்வொரு ரேடியோ அபிமானியும் பகுத்துணர்ந்து விரும்பி வாங்குவதாகும்.

மிதமான விலையில், கவர்ச்சியான தோற்றமும் உள்ளவைகளாக இருப்பதால், அவைகள் அழகுக்கும், அதோடு திறமையாக இயங்குவதற்கும், வெகுவாகவே விரும்பி வாங்கப் படுகின்றன.

தரம்மிக்க பொருள்களைத் தயாரிப்பதில் உலகப் புகழ்பெற்ற ஜப்பானிய நாட்டு ஹயகாவா எலக்டிரிக் கம்பெனியாரின் தொழில் கூட்டுறவினால் ஷார்ப் ரேடியோக்கள் செய்யப்படுகின்றன என்பதைக் கவனியுங்கள்.




இந்தியன் பிளாஸ்டிக்ஸ் லிட், லோட்டஸ் ஹவுஸ், பம்பாய்-1

aiaces JB-465




# இளமையிற் கல்

சமையல் பயிலும் சிறுமி, அவளே வருங்காலக் குடும்பத் தலைவி. கற்றுக்கொடுங்களேன் ஒரு நாள். எவ்வளவு விரைவில் கற்றுக்கொடுக்கிறீர்களோ அவ்வளவுக்கு அவ்வளவு மேல்.

உங்கள் குழந்தைகளுக்கு நீங்கள் இப்போதே கற்றுக்கொடுக்க வேண்டிய மற்றொரு பாடம், பற்களையும் ஈறுகளையும் ஒழுங்கு தவறாமல் பராமரிப்பதே. பற்சிதைவும் ஈறு நோய்களும் வராமல் பாதுகாத்த உங்கள் உதவிக்காகப் பிற்காலத்திலே நன்றி செலுத்துவார்கள் அவர்கள்.

போர்ஹான்ஸ் பற்பசைகொண்டு பற்களையும் ஈறுகளையும் பாதுகாத்துக்கொள்ள இன்றே பழக்குங்கள் உங்கள் செல்வங்களை. அது ஒரு பல் வைத்தியரின் தயாரிப்பாகும்; ஈறுகளின் நலனுக்காக டாக்டர் போர்ஹான்ஸ் தயாரித்த விசேஷத் துவர் மருந்துகளை அடங்கிய பற்பசை உலகில் இதுவொன்றே. தவறாமல் உபயோகித்துவந்தால் பளிச்சென்ற வெண் பற்களையும் பாங்கான உறுதிவாய்ந்த ஈறுகளையும் பெற்று விளங்குவது திண்ணம்.

"CARE OF THE TEETH AND GUMS" என்ற சிறிய வண்ணப் புத்தகத்தை இலவசமாகப் பெற, தபால் செலவுக்காக 10 பைசா தபால் வில்லைகளை இணைத்து எழுதவும்: மானேர்ஸ் டெண்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை நம்பர் 10031, பம்பாய்




K.6

**COUPON**

Please send me a copy of the booklet
"CARE OF THE TEETH AND GUMS"

*Name* ..........................................

*Address* ..........................................

..........................................

பயபக்தி கொண்டிருந்தாரென்பது தெரியும். தங்களுடைய கண்களையே அவர்களால் நம்ப முடியவில்லை.

அமைச்சர் சாளுவ நரசிம்மர் தம் கரங்களால் தலையைத் தாங்கிப் பிடித்துக்கொண்டார். அச்சுதராயரின் விழிகளும் அவர் விழிகளும் ரகசியமாகச் சந்தித்துக் கொண்டன. திடீரென்று அச்சுத ராயர் குறுக்கிட்டு, ''விசுவநாதனை நம்பி நாம் அனுப்பக் கூடாது!'' என்றார்.

''காரணம்?'' என்றார் சக்கரவர்த்தி.

''நாகம நாயக்கரை எதிர்ப்பதற்காக அவர் குமாரன் புறப்படவில்லை. அவருடன் சேர்ந்து கொண்டு நம்மையே எதிர்ப்பதற்காக அவன் இப்போது அநுமதி கேட்கிறான்.''

''அச்சுதராயர் கூறுவதையும் சக்கரவர்த்திகள் ஆலோசனை செய்வது நல்லது. விசுவநாதனுக்கு அவன் அப்பாவே இப்படி ஒரு யோசனை கூறியிருக்கலாம்'' என்றார் ஓர் அமர நாயக்கர்.

விசுவநாதனின் விழிகளில் நீர் பொங்கியது.

''சக்கரவர்த்திகளே! நாங்கள் இருவரும் சேர்ந்து குற்றமிழைத்தால், இங்குள்ள எல்லா அமரநாயக்கர்களுமே எங்கள் மீது படை நடத்தி வரட்டும். நம்முடைய சாம்ராஜ்யத்தின் வலிமையை நான் இன்னும் அந்த அளவுக்குத் தவறாக மதிப்பிடக் கற்றுக்கொள்ளவில்லை. என் அப்பாவை விட எனக்கு அரச தர்மம் மேலானதாகத் தோன்றுகிறது. சக்கரவர்த்திகளின் ஆணையை நிறைவேற்றுவதற்கு எனக்கு இந்தவாய்ப்பைத் தருமாறு கேட்டுக் கொள்கிறேன்.''

சக்கரவர்த்தி அவனை அருகில் அழைத்தார். தமது உத்தரீயத்தால் அவன் கண்ணீரைத் துடைத்து விட்டார்.

''நான் உன்னை நம்புகிறேன். நீயே மதுரைக்குப் படை நடத்திச் செல்!'' என்றார்.

## அத்தியாயம் முப்பத்தியேழு

# அம்பு பாய்ந்தது

சோலைவனத்திடையே உலவி வரும் ஒருவன் திடீரென்று அது பாலைவனமாக மாறி விட்டால் எப்படிப்பட்ட அதிர்ச்சி அடைவான்? அமைதியோடும் அழகோடும் பாய்ந்து செல்லும் துங்கபத்திராவில் திடீரென்று வெள்ளம் பொங்கி அது நகரத்துக்குள் வெறி பிடித்துக் குமுறி வந்தால் எப்படியிருக்கும்? சபை கலைந்து அரண்மனையிலிருந்து வெளியே வந்த விசுவநாதன் அப்படிப்பட்டதொரு பயங்கரமான மாறுதல் ஏற்பட்டதைக் கண்டு திகைத்து நின்றான்.

அதுவரையிலும் அவனுடன் நெருங்கிப் பழகிவந்த அமரநாயக்கர்கள்கூட, அவனை அச்சத்தோடு பார்த்துவிட்டு அவன் பார்வையிலிருந்து விலகிக் கொண்டார்கள். கானகத்திலிருந்து வழி தவறி வந்து நகரத்துக்குள் புகுந்துவிட்ட வரிப் புலியைக் கண்டால் மனிதர்கள் எவ்வாறு நடந்து கொள்வார்களோ, அவ்வாறே அன்றைக்குச் சபைக்கு வந்த அதிகாரிகள் அனைவரும் அவனிடம் நடந்து கொண்டார்கள். வெறுப்போடு அவனை நோக்கி விழித்தவர்கள் சிலர்; பயத்தோடு பார்த்தவர்கள் சிலர்; ஆத்திரத்தோடு அவனை உருட்டி நோக்கியவர்கள் சிலர்.

அரியநாத முதலியார் மட்டிலுமே அவனைத் தொடர்ந்து வரத் துணிந்தார். அமைச்சர் சாளுவ நரசிம்மரை அவன் சந்தித்துப் பேச விரும்பினான். சபை கலைந்தவுடன் கணப் பொழுதுகூட அவர் அங்கு தங்கவில்லையாம். கோபத்தோடு எங்கோ புறப்பட்டுச் சென்றதாகச் செய்தி கிடைத்தது.

அரியநாத முதலியாரோடு தன் அரண்மனைக் கூடத்துக்குத் திரும்பி வந்த விசுவநாதன், ''இப்படி எல்லோருமே என்னை வெறுத்து ஒதுக்கும்படியாக நான் என்ன செய்துவிட்டேன் என்று தோன்றவில்லையே!'' என்று கலங்கும் குரலில் அரியநாத முதலியாரிடம் கேட்டான்.

முதலியாரும் அப்போது பதில் கூறும் நிலையில் இல்லை. அவருடைய மனமே வெகுவாகக் குழம்பி யிருந்தது. மிகவும் ஏழைமை வாய்ப்பட்டுத் தவித்த தமிழ்க் குடும்பம் ஒன்றில் காஞ்சிக்கடுத்த கிராமத்தில் பிறந்து வளர்ந்தவர் அவர். வேலையை நாடி அவர் விஜயநகரத்துக்கு வந்தபோது அவரை முதன் முதலில் ஏற்றுக் கொண்டு ஆதரவு தந்தவர் நாகம நாயக்கர். அவர் தமிழரென்பதால் சிறிதும் வேறுபாடு காட்டாமல், அவரிடமிருந்த திறமையையும் பண்பையும் கண்டுகொண்டு, சிறிது சிறிதாக அவரை உயர்ந்த நிலைக்குக் கொண்டு வந்தார். பிறகு எண், எழுத்து, போர்ப் பயிற்சி இவைகளில் அவருக்கு இருந்த ஆற்றலைக் கிருஷ்ணதேவ ராயரிடம் எடுத்துச் சொல்லி, அரண்மனை அதிகாரியாக அவர் விளங்குவதற்கு ஏற்பாடு செய்தவரும் நாகம நாயக்கர்தாம்.

அமர நாயக்கர்கள் பலரது அன்புக்கும் மரியாதைக்கும் உரியவராக விளங்கும் அரியநாத முதலியார், முதன் முதலில் நாகம நாயக்கரின் சாதாரணப் பணியாளராக, வேலையில் அமர்ந்தவர். அவரைத் தமது குடும்பத்தில் ஒருவராக, தமது மூத்த குமாரராகப் பாவித்து, நாகம நாயக்கர் இந்த நிலைக்குக் கொண்டு வந்திருக்கிறார்.

இதையெல்லாம் நினைத்துக் கொண்ட அரியநாத முதலியார் விசுவநாதன் கேட்டவுடன் கண் கலங்கினாரே தவிர பதில் கூறவில்லை.

''அரியநாத முதலியாரே!'' என்று அவரை மீண்டும் அவர் நினைவுக்குக் கொண்டு வந்தான் விசுவநாதன்.

''உங்களுடைய தந்தையார் உங்களுக்கு மட்டும் தந்தையாரல்ல; எனக்குமே அவர் தந்தையார்தாம்'' என்று நாத் தழுதழுக்கக்

கூறியவர், 'இப்போது அவருக்காகப் பார்ப்பதா, உங்களுக்காகப் பார்ப்பதா என்று எனக்குத் தோன்றவில்லை'' என்றார்.

''அப்படியானால் இங்குள்ளவர்கள் அப்பாவுக்கு அஞ்சித்தான் அவருக்கு எதிராகப் போகத் துணியவில்லை என்று கூறுகிறீர்களா?'' என்று கேட்டான்.

''அதுவும் ஒரு காரணம்; சக்கரவர்த்திகள் அவர்களில் ஒருவரைச் சுட்டிக் காட்டி ஆணையிடாததும் மற்றொரு காரணம்.''

''சக்கரவர்த்திகள் ஏன் ஆணையிடவில்லை தெரியுமா?'' என்று கேட்ட விசுவநாதனே அதற்கு மறுமொழியும் கூறினன். ''அரச ஆணையைவிட உயர்ந்தது தர்மம். அந்த அறநெறியில் நம்பிக்கை கொண்ட அதிகாரிகள் யாரேனும் இருக்கிறார்களா என்று பார்ப்பதற்காகத்தான் அவர்கள் ஆணையிடவில்லை....''

அரியநாத முதலியாருக்கு இது சுருக்கென்று தைத்தது. நாகம நாயக்கரின் செயல் அதர்மச் செயல் என்று விசுவநாதனே முடிவுக்கு வந்து விட்டான். அவன் முடிவை அவர் இதயம் ஏற்றுக் கொள்ளத் தயங்கினலும் அவரது மனச்சாட்சியால் புறக்கணிக்க முடியவில்லை.

விசுவநாதன் மேலும் கூறலுனன்:

''பாண்டியர் பலமிழந்தவர் என்ற காரணத்தால் அவருடைய நாட்டைக் கவர்ந்து தாமே ஆள நினைப்பது நம்பிக்கைத் துரோகம். அடுத்தாற்போல், சக்கரவர்த்திகளின் ஆணையை மீறுவது என்பது சாம்ராஜ்யத்துக்கே செய்யும் தீமை ஆகும். நம்முடைய சாம்ராஜ்யம் பல மொழிகள் பேசுவோர் கொண்ட ஒரு மாபெரும் சாம்ராஜ்யம். ஒற்றுமையும் ஒத்துழைப்பும் ஒரே உணர்வும் இங்கே நிலவும்வரையில்தான் இது நிலைத்து நிற்கும். அப்பாவின் செயல் வேற்றுமையை விளைவித்துப் பகை உணர்ச்சியை மூட்டி விட்டிருக்கிறது. நான் மிகவும் மனம் நொந்து பேசுகிறேன். தன்னல ஆசையால் தனி நாடும், அதிகாரமும் தமக்கு வேண்டுமென்பதால், அப்பா இந்தக் குற்றம் புரியத் தொடங்கி விட்டார்கள். இனியும் இதைப் பொறுத்துக் கொண்டிருக்க என்னல் முடியாது....''

''எல்லோருமே உங்களைக் கைவிட்டு விட்டார்களே!'' என்று பதறினர் முதலியார்.

''யார் என்னைக் கைவிட்டாலும் நியாயம் என்று நினைப்பதை மட்டும் நான் கைவிடமாட்டேன். சக்கரவர்த்திகள் என்னைக் கைவிடவில்லை. நீங்கள் என்ன சொல்லு

## ராய்பகதூர் ஹிம்சந்த் கே. ஷா

பெரிய ஆலைகளில் உண்டாக்கப்படும் அலுமினியக் கட்டிகளைத் தினசரி உபயோகத்துக்கு ஏற்றபடி பாத்திரங்களாக மாற்றி வீட்டுக்கு வீடு அடுக்களை வரையில் பரவும்படி செய்ய உதவிய தொழிற் பிரமுகர்களில் காலஞ்சென்ற ராய்பஹதூர் ஹிம்சந்த் கே. ஷா முதலில் நின்றவர். அவருடைய எழுபத்தோராண்டு வாழ்க்கையில் நாற்பது ஆண்டுகளை அலுமினியத்துடனேயே கழித்தார். பிரபலமடைந்துள்ள ஜீவன்லால் கம்பெனியின் சென்னைக் கிளையை முப்பது ஆண்டுகளுக்கு முன்பு ஆரம்பித்தவர் அவரே. அன்று முதல் அதன் வளர்ச்சியை அல்லும் பகலும் கவனித்து இன்றுள்ள நிலைக்கு அதை உயர்த்தக் காரணமாயிருந்தவரும் அவரே. மைசூர் பிரிமியர் மெட்டல் தொழிற்சாலையை ஆரம்பித்து மார்க்கெட்டில் நன்கு பழக்கமான ''ஸன்'' மார்க்கு அலுமினிய, பித்தளை, இப்போதைய பாஷனை, எவர்சில்வர் பாத்திரங்களை மக்கள் விரும்பும் புதுப் புது மோஸ்தர்களில் அளித்தவரும் அவர்தான். இந்தக் கம்பெனி இப்போது ஜீவன்லால் கம்பெனியுடனேயே இணைந்து விட்டது. இந்தியாவின் அண்டை நாடுகளில் அலுமினியப் பொருள்களுக்கு ஒரு 'மவுசை' ஏற்படுத்திப் பெருவாரியான ஏற்றுமதி வியாபாரத்தை வளர்த்த பெருமையும் அவரையே சாரும். இன்று ஜீவன்லால் (1929) லிமிடெட் கம்பெனியார் உலகத்திலேயே மிகப் பெரிய அலுமினியச் சாமான்களை உற்பத்தி செய்பவர்கள் என்ற புகழைத் தேடி அளித்தவர் ஹிம்சந்த் ஷா.



மிகுந்த மனிதாபிமானமும் சமூக சேவா ஆர்வமும் நிறைந்த திரு ஹிம்சந்த் ஷா தமது சொந்த முயற்சியினால் கல்கத்தாவில் சுமார் மூன்றரை லட்சம் ரூபாய் செலவில் சிறுவர் சிறுமிகள் கல்விக்காக ஒரு பால மந்திர் அமைத்திருக்கிறார். ஆர்வமுள்ள பல மாணவர்களுக்கு உதவிச் சம்பளம் கொடுத்தும் அவர்கள் முன்னேற்றத்துக்கும் வகை செய்திருக்கிறார். அவருடைய மறைவு இந்திய அலுமினிய உலகத்துக்கு மட்டுமின்றிச் சமூகத்துக்கே பெரியதொரு நஷ்டம். அவருடைய குடும்பத்தினருக்கும் ஜீவன்லால் கம்பெனி ஸ்தாபனத்துக்கும் எமது ஆழ்ந்த அனுதாபங்கள்.

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஏனெனில் ஒரே தேய்ப்பில் கால்கேட் டென்டல் கிரீம், துர்நாற்றத்தையும், சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சதவிகிதத்தை ஒழித்துவிடுகிறது.

கால்கேட், 10ல் 7 சந்தர்ப்பங்களில் உடனடியாக வாய் துர்நாற்றத்தை அகற்றுகிறது என்பதையும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட்டினால் பற்களைத்துலக்கும் முறையால், இது வரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பெருமளவில் ஏராளமானவர்களுக்குச் சொத்தை தடுக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான ஆராய்ச்சிகள் நிரூபித்துள்ளன. இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு.

கால்கேட்டின் நீடித்திருக்கும், நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்.

பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்மையான பற்களைப் பெறவும் வழக்கமாக கால்கேட்டினால் பல் துலக்குங்கள்.

நீங்கள் பற்பொடியை விரும்பினால், இந்தப் பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.







...உலகிலேயே பெரும்பாலானவர்கள் மற்றெல்லாப் பற்பசைகளையும் விட, கால்கேட் டென்டல் கிரீமையே வாங்குகிறார்கள்.

கிறீர்கள்? நீங்கள் என்னோடு பாண்டிய நாட்டுக்கு வரப்போகிறீர்களா இல்லையா?''

அரியநாத முதலியார் இதைக் கேட்டுத் தவியாய்த் தவித்தார்.

''என்னை உப்பிட்டு வளர்த்து இந்த நிலைக்கு ஆளாக்கிவிட்டவரோடு என்னைப் போர் புரியச் சொல்கிறீர்களா?''

''நான் எவருடைய உதிரத்தில் பிறந்து வளர்ந்தேனோ அவருடன் போர் தொடுக்கப் போகிறேன். என்னுடைய இரு விழிகளில் ஒருவர் சக்கரவர்த்திகள்; மற்றொருவர் அப்பா. அந்த இரு விழிகளில் ஒன்றில் நானே வேல் பாய்ச்சிக் கொள்ளப் போகிறேன். அந்த விழி குருடாகப் போனாலும் போகட்டும் என்ற முடிவுக்கு வந்திருக்கிறேன் — உங்களுடைய முடிவைச் சொல்லுங்கள்!''

இரு விழிகளிலும் தாரை தாரையாக நீர் வடிந்தது விசுவநாதனுக்கு.

''நீங்கள் மட்டும் உங்கள் அப்பாவோடு போர் புரிவதாக இருக்காது'' என்றார் முதலியார்; ''உங்கள் படைகளில் இருக்கும் வீரர்களின் உற்றார் உறவினர்கள்தாம் உங்கள் அப்பாவின் படைகளிலும் இருக்கிறார்கள். அண்ணன் தம்பிகள், மாமன் மைத்துனர்கள் அப்பா பிள்ளைகள் இவர்களுக்குள் நடக்கும் போராக இது இருக்கும்.''

திடுக்கிட்டான் விசுவநாதன். அப்போது தான் அவனுக்கு அந்தப் பயங்கரமான உண்மை புலப்பட்டது. அவனுடைய சிறு நாட்டின் படைகளில் பாதிப் பேர் அவன் தந்தையோடு சென்றிருந்தார்கள். எஞ்சியிருந்த மறு பாதிப் பேரும் அவர்களுடைய உறவினர்கள். நாகம நாயக்கரால் படையில் சேர்க்கப்பட்டு அவரிடம் எல்லையற்ற விசுவாசம் கொண்டிருந்தவர்கள்.

''நான் போர் தொடுப்பதில் உள்ள சிரமங்களை எனக்குச் சுட்டிக் காட்டுகிறீர்கள். எனக்கு வெற்றி கிடைக்குமா என்ற சந்தேகமும் உங்களுக்கு இருக்கிறது. ஆனால் இவ்வளவு துன்பங்கள் இருப்பதாலேயே நான் முன்னிலும் உறுதி கொண்டிருக்கிறேன்'' என்றான் விசுவநாதன்.

அரியநாத முதலியார் அவன் முகத்தை ஏறிட்டு நோக்கினார். அபூர்வமாக எப்போதாவது சக்கரவர்த்தி கிருஷ்ணதேவராயரின் முகத்தில் இலங்கும் ஓர் ஒளி இப்போது விசுவநாதனின் முகத்தில் சுடர் விட்டது. அவன் தன் உயிரையே இந்தப் போரில் கொடுக்கத் துணிந்து விட்டான் என்பதை அவர் கண்டு கொண்டார்.

''உங்களோடு நானும் வருகிறேன்'' என்றார் அரியநாத முதலியார்.

அவருடைய கரங்களை மெல்லப் பற்றித் தன் கண்ணீரால் நனைத்தான் அவன். எத்தகைய மனப் போராட்டங்களுக்குப் பின்பு அவர் இந்த முடிவுக்கு வந்திருக்க வேண்டும் என்பது அவனுக்கு விளங்கி விட்டது.

''உங்களுக்கு நன்றி சொல்ல எனக்குச் சொல் இல்லை'' என்று ஒரு கணம் தத்தளித்துவிட்டு, ''நான் வருகிறேன்'' என்று விடைபெற்றுக்கொண்டு அங்கிருந்து கிளம்பி விட்டான்.

உடனடியாக அவனுடைய மாளிகைக்குச் செல்வதற்கு அவனுக்குத் துணிவில்லை. அன்னையார் கமலா தேவிக்கு இதற்குள் எப்படியோ செய்தி எட்டியிருக்கும். அவரைச் சந்திப்பதற்குள்ள துணிவை அவன் வேறு எங்காவது தேடிக் கொள்ள வேண்டியிருந்தது. இயல்பாகவே உணர்ச்சி வசப்படும் தன்மை கொண்ட கமலா தேவியாரால் இந்தச் செய்தியைத் தாங்கியிருக்கவே முடியாது. அவர்களுடைய கண்ணீருக்காக மட்டிலுமே விசுவநாதன் அஞ்சித் தயங்கிப் போய் நின்றான்.

அதைப் பொறுத்துக் கொள்வதற்கு முன்பாக அவன் தன்னைத் திடசித்தமுள்ளவனாகச் செய்து கொள்ள வேண்டியிருந்தது. லட்சுமியும் பெண்தானென்றாலும் அவள் இதைப் புரிந்து கொள்ளக் கூடியவள். அவனுடைய அன்னைக்கு ஆறுதல் சொல்வதற்கு அவளுடைய உதவியே இப்போது தேவையாக இருந்தது. அவளை முதலில் கமலாதேவியிடம் தன் சார்பில் அனுப்பி வைத்துவிட்டுப் பிறகு அவர்களைச் சந்திக்க என்று நினைத்தான்.

அவனுடைய குதிரை தன் போக்கில் சென்று அமைச்சரின் மாளிகை முன்பு நின்றது. இறங்கிச் சென்று உள்ளே நுழைந்தான். வெளி வாயில் காவலர்களின் முகங்கள் வழக்கமாக அவனைக் கண்டு மலர்வதுபோல் அன்று மலரவில்லை.

கடந்து உள் முகப்பருகே சென்றான்.

''ஐயா!'' என்று பதறிக் கொண்டு ஓடி வந்தான் உள் முகப்புக் காவலன்.

''என்ன!''

''தங்களுக்கு... தங்களுக்கு...'' காவலனால் பேச முடியவில்லை.

திடுக்கிட்டான் விசுவநாதன்.

''உள்ளே நுழைவதற்கு அனுமதி மறுக்கும்படி அமைச்சர் எனக்குக் கட்டளையிட்டிருக்கிறார்கள்.''

விஸ்வநாதன் அதே இடத்தில் சிலைபோல் நின்றான். உள்ளே கூடத்தில் எரிமலைபோல் அமைச்சர் குமுறும் குரல் கேட்டது. லட்சுமி தேம்பித் தேம்பி அழுது கொண்டிருந்தாள்.

''தசரதனுக்கு ஒரு ராமன் பிறந்த இந்த நாட்டில் விசுவநாதனும் பிறந்திருக்கிறான். அவன் அப்பாவின் மீதே படையெடுத்துப் போகப் போகிறான். என் நண்பர் நாகமருக்கு அவன் துரோகம் செய்தால் என்ன? எனக்குச் செய்தால் என்ன? இரண்டும் ஒன்றுதான்! இனிமேல் அவன் இங்கு வர வேண்டாம்; நீ அவனோடு பழகவும் வேண்டாம்!''

விசுவநாதனின் தலை சுழன்றதால் கீழே விழுந்துவிடாமலிருப்பதற்காக அருகிலிருந்த தூணை மெல்லப் பற்றிக் கொண்டான். அவனுடைய நெஞ்சத்தில் ஓர் அம்பு பாய்ந்தது போலவும் அதிலிருந்து உதிரம் கொட்டுவது போலவும் தோன்றியது அவனுக்கு.

**(முதல் பாகம் முற்றிற்று)**

# அகர வரிசை

—— நாமோடி ——

அகர வரிசைப்படி
பார்லிமெண்டில்
மந்திரிகள்
இடம் பெறலாம் என்ற
பேச்சு அடிபட்டபோது
எழுந்த
ஹாஸ்யக் கற்பனை இது!

அன்று ஸ்ரீமதி இந்திரா காந்திக்கு இருந்த மகிழ்ச்சி சொல்லி முடியாது. மந்திரி சபையில் யார் யாருக்கு எந்த வரிசைக் கிரமத்தை அளிப்பது, அவர்களை எப்படி வரிசைப்படுத்துவது என்று திகைத்துக்கொண்டிருந்தார். இதனால் அவர்களுக்கிடையே மனக்கசப்பு அதிகமானால் என்ன பண்ணுவது என்று மனம் புழுங்கினார். திடீரென்று அவருக்கு ஒரு யோசனை தோன்றிற்று. எல்லாரையும் அவர்களுடைய பெயர்களின் அகர வரிசைப் படி உட்கார்த்தி வைத்தால்



என்ன என்று தோன்றிற்று. அப்படியே செய்துவிட்டு, மிக்க மகிழ்ச்சியுடன் வீடு திரும்பிப் படுக்கையில் படுத்தார்.

சற்று நேரம்தான் கண்ணயர்ந்திருப்பார், யாரோ கதவைத் தட்டும் சத்தம் கேட்டது. கதவைத் திறந்தால் வீட்டு வேலைக்காரி நின்று கொண்டிருந்தாள்.

''என்ன?''

''அம்மா! ஸ்ரீ நந்தா அவர்கள் தங்களைப் பார்க்கக் காத்துக் கொண்டிருக்கிறார். ஏதோ அவசரமாகப் பார்க்க வேண்டுமாம்.''

என்னமோ ஏதோ என்று பயந்து கொண்டு ஸ்ரீமதி இந்திரா வாசல் அறைக்கு வந்தார். 'சோபா'வில் உட்கார்ந்திருந்த ஸ்ரீ நந்தா எழுந்திருந்து, ''இந்தச் சமயத்தில் தங்களைத் தொந்தரவு செய்வதற்கு என்னை மன்னிக்க வேண்டும். ஒரு முக்கியமான விஷயத்தைத் தங்களிடம் சொல்வதற்காக வந்தேன். தாங்கள் எங்கள் பெயர்களை அகர வரிசைப்படுத்தியது ஆங்கில நெடுங்கணக்கைக் கொண்டா, அல்லது ஹிந்தி நெடுங்கணக்கைக் கொண்டா என்று என் சகாக்கள் தெரிந்துகொள்ள விரும்புகிறார்கள்'' என்றார்.

''ஏன்? இதில் ஒரு வித்தியாசமும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லையே? எந்த நெடுங்கணக்காக இருந்தால் என்ன! எல்லாம் ஒன்றாகத் தானே இருக்கும்!''

''அப்படிச் சொல்லாதீர்கள்! தங்கள் பெயரையே எடுத்துக் கொள்ளுங்கள். ஹிந்தி நெடுங்கணக்கின்படி பார்த்தால் தங்கள் பெயரின் முதல் எழுத்து, மூன்றாவது எழுத்தாக வருகிறது. ஆனால் ஆங்கில நெடுங்கணக்கின்படி பார்த்தால் ஒன்பதாவது எழுத்தாக வருகிறது.''

''ஏது, ஏ, பீ, ஸி, டி, ஈ, எப், ஜீ, எச் என்று சொல்லிப் பார்த்துக் கொள்ளாமலே 'ஐ' என்பது ஒன்பதாவது எழுத்து என்று டக்கென்று சொல்லி விட்டீர்களே...!''

''இதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது! இன்று மாலை முழுவதும் இதைப் பற்றித் தானே நாங்கள் விவாதித்துக் கொண்டிருந்தோம்....!''

''சரி, 'சட்டப்படி இந்தி தானே இணைப்பு மொழி. ஆகவே இந்தி நெடுங்கணக்கு என்றே வைத்துக் கொள்வோம்.''



''இதை நான் ஆட்சேபிக்கிறேன்'' என்று சொல்லிக் கொண்டே ஸ்ரீ சுப்பிரமணியம் உள்ளே நுழைந்தார்.

''ஏன் ஆட்சேபிக்கிறீர்கள்?'' என்று ஸ்ரீமதி இந்திரா கேட்டார்.

''தங்கள் மீது இந்தியைத் திணிப்பதற்கு இது ஒரு புதிய சூழ்ச்சியோ என்று தென்னிந்தியர்கள் கேட்பார்கள். அதனால் ஆட்சேபிக்கிறேன். ஆனா[illegible] இருக்கட்டும்.

உங்களிடம் நான் சொல்ல வந்த விஷயம் வேறு. இன்றிலிருந்து என் பெயரை அழகன் என்று மாற்றிக்கொண்டு விட்டேன்.''

''அழகன் என்றால் ஆங்கிலத்தில் 'ஏஎல்ஏ' என்று ஆரம்பிக்குமா, அல்லது 'ஏஇஜட் எச். ஏ.' என்று ஆரம்பிக்குமா?'' — ஸ்ரீமதி இந்திரா.

''எது எப்படி ஆரம்பித்தால் என்ன ? அழகனுக்கு முந்தையது 'அப்பாஸ்' என்பது ஞாபகம் இருக்கட்டும். இன்றிலிருந்து என் பெயரை 'அப்பாஸ்' என்று மாற்றிக் கொண்டு விட்டேன்'' என்று கூறிக் கொண்டே ஸ்ரீ சுவரன் சிங் உள்ளே நுழைந்தார்.

''அப்பாஸ் என்பது முஸ்லிம் பெயராச்சே!''

''இருக்கட்டுமே ! நம் நாட்டில் இந்து முஸ்லிம் ஒற்றுமை நிலவுகிறது என்று காட்டுவதற்கு இது ஒரு நல்ல வழி அல்லவா !''



''ஆனால் அப்பாஸுக்கு முந்தையதுதான் அபயம். என் பெயரை நான் அபயம் என்று மாற்றிக் கொண்டு விட்டேன்'' என்று கூறிக் கொண்டே ஸ்ரீ பட்நாயக் உள்ளே நுழைந்தார்.

''என் பெயரையும் நான் மாற்றிக்கொண்டு விட்டேன். என்னை இனி நீங்கள் ஸ்ரீமான் 'ஏ' என்றுதான் அழைக்க வேண்டும். இனி 'ஏ'வாகிய என்னைத்தான் எல்லாருக்கும் முந்தி உட்கார வைக்கவேண்டும்'' என்று கூறிக்கொண்டே ஸ்ரீ அசோக்மேத்தா உள்ளே நுழைந்தார்.

''ஹிந்தி நெடுங்கணக்கின் படி பார்த்தால் அழகனில் உள்ள 'அ'வுக்குப் பிறகு தான் 'ஏ' வருகிறது என்பது ஞாபகம் இருக்கட்டும்'' என்றார் ஸ்ரீ சுப்பிரமணியம்.

''ஹிந்தி நெடுங்கணக்கை ஆட்சேபிக்கிறேன் என்று இப்



பொழுது தானே சொன்னீர்கள்!'' — ஸ்ரீமதி இந்திரா.

ஆனால் இதற்கு ஸ்ரீ சுப்பிரமணியம் பதில் சொல்லுவதற்குமுன் ஸ்ரீ அசோக் மேத்தாகுறுக்கிட்டு, ''ஹிந்தி நெடுங்கணக்கின்படியா வரிசைக்கிரமம்? அப்படியானால் என் பெயரை 'அ'வென்று மாற்றிக் கொண்டு விட்டேன் என்று வைத்துக் கொள்ளுங்கள்'' என்றார்.

''நீங்கள் என்ன உங்கள் பெயரை 'அ'வென்று மாற்றிக் கொள்வது! நாங்கள் எல்லாருமேதான் எங்கள் பெயர்களை 'அ' வென்று மாற்றிக் கொண்டு விட்டோம்'' என்று கூறிக் கொண்டே மற்ற எல்லா மந்திரிகளும் உள்ளே நுழைந்தார்கள்.

''என் பெயரும் இனி 'அ'. நான்தான் முதல்.''

''என் பெயரும் 'அ'தான். நான்தான் முதல்.''

''இல்லை, நான்தான்.''

''இல்லை, நான்தான்.''

ஸ்ரீமதி இந்திராவுக்குத் தலை சுற்றியது. மயக்கம் போட்டுக் கீழே விழுந்து விடுவார்போலப்பட்டது. 'கிறீச்' என்று பலமாக ஒரு சத்தம் போட்டார்.

கதவைத் திறந்துகொண்டு வேலைக்காரி ஓடோடியும் வந்தாள். ஸ்ரீமதி இந்திரா கண்களை விழித்துப் பார்த்தார். தாம் படுக்கையில் படுத்திருப்பதையும் வேலைக்காரி எதிரே நிற்பதையும் கண்டார்.



''ஸ்ரீ நந்தா முதலானவர்கள் எங்கே! அவர்கள் போய் விட்டார்களா ?''

''யாருமே வரவில்லையே! தாங்கள் கனவில் அல்லவா எதையோ கண்டு பயந்து சத்தம் போட்டீர்கள் !''

''கனவா ! அப்படியானால் நான் பிழைத்தேன்!'' என்றார் ஸ்ரீமதி இந்திரா.

### அத்தியாயம் அறுபத்திரண்டு

# ஒற்றைச் சிறகு

சபேசனை வியப்புடன் ஏறிட்டு நோக்கிய சந்தியா, ''அப்படியானால் நாங்கள் கவுண்டன்பாளையம் முகாமி லிருந்து வெளியேறிய அடுத்த நாளே நீங்கள் ஊரை விட்டுக் கிளம்பி விட்டீர் களா?'' என்று கேட்டாள்.

'ஆம்; என் ஜீவனில் பாதி பிரிந்து போனபின் அங்கே பிரேத மனிதனாக நடமாடிக் கொண்டிருக்க என்னால் இயல வில்லை. அதனால் புறப்பட்டு விட்டேன்' என்று சொல்ல வாயெடுத்த சபேசன் ஏனோ அப்படிச் சொல்லாமல், 'ஆமாம்' என்று மட்டும் புன்னகையுடன் மெல்லத் தலையசைத்தான்.

''ஓ...'' என்றவாறு தலை குனிந்த சந்தியா தணிந்த குரலில் சொன்னாள்: ''அன்று அந்த முகாமில் நடந்த கலவரத் துக்குப்பின் என் தந்தையும், இன்னும் சில அகதிகளும் சேர்ந்து இரவோடு இர வாக யாரிடமும் சொல்லாமல் அங் கிருந்து ஓடிவிட்டோம். ஆனால் எங்களைப் போலீஸார் சேலத்தில் மடக்கிப் பிடித்து விட்டார்கள். ஏதேதோ விசாரணைக்குப் பிறகு எங்களில் சிலரைத் தண்டகாரண்ய முகாமுக்கு அனுப்பி வைத்தார்கள். நாங்கள் மட்டும் அங்கேயும் போக முடியாதென முரண்டு பிடித்தோம். எங்கள் சொந்த ராஜ்யத்துக்கே போய் விடப் போவதாகச் சொன்னோம். சரி என்று எங்களை விட்டு விட்டார்கள். என் தந்தை ஏனோ அவர்களிடம் சொன்னதுபோல் கல்கத்தாவுக்குச் செல் லாமல் சென்னைக்கு வந்து விட்டார்.''

''இப்போது உன் தந்தை இங்கே என்ன வேலை பார்க்கிறார்? அல்லது ஏதாவது வியாபாரம் செய்கிறாரா?''

''இல்லை. இனிமேல்தான்.....''

அவனுக்கு இந்தப் பதில் ஆச்சரியத்தைத் தந்தது. ஏனென்றால், கவுண்டன்பாளையம் முகாமில் மிகவும் வறுமை நிலையில் காணப் பட்ட சுரேஷ் சௌத்ரி சென்னைக்கு வந்த பின் வேலைவெட்டி எதுவும் இல்லாமலே இவ் வளவு பெரிய வீட்டை வாடகைக்கு எடுத் துக்கொண்டு இத்தனை வசதியாக இருக்கிறாரே என்பதால்தான். ஆனால் அவ்வியப்புக்கு



# ஜீவகீதம்

ஜெகசிற்பியன்

அவன் உடனே ஒரு சமாதானமும் தேடிக் கொண்டான்: 'சென்னையில் யாராவது உற வினர்களோ, நெருங்கிய நண்பர்களோ நல்ல நிலைமையில் இருக்கலாம்; அவர்கள் அவருக்கு உதவி செய்திருக்கலாம். அல்லது அவர் நாடு விட்டு நாடு வந்தபோதே தம் குடும்பச் சொத்தாக ஏதேனும் விலைமதிப் புள்ள நகைநட்டுக்களைக் கையோடு கொண்டு வந்திருந்து அவற்றை இங்கே விற்றுப் பண மாக்கிக் கொண்டுமிருக்கலாம்.'

மெல்லச் சிரித்துக்கொண்ட சபேசன், ''மனித வாழ்க்கையே ஒரு புதிராகத்தான் இருக்கிறது. அது எந்தச் சமயம், எப்படி யெல்லாம் ஏறும், இறங்கும், மாறும், திரும்பும் என்பதை மனிதனால் எள்ளத்தனை யும் முன்கூட்டியே அனுமானிக்க முடிவ தில்லை'' என்றவன் சட்டென்று பேச்சை மாற்றி, ''நானும் இப்போது இந்தத் தெரு வுக்குப் பக்கத்துத் தெருவில்தான் குடியிருக் கிறேன், ஒரு சிறிய அறையை வாடகைக்கு



எடுத்துக் கொண்டு!'' என்றான் உள்ளார்ந்த பெருமையுடன்.

''அப்படியா?'' என்று ஆச்சரியமும் மகிழ்ச்சியுமாகக் கண்களை அகல மலர்த்தினாள் சந்தியா.

அழகே உருவான அந்த வங்காளிப் பெண்ணுடன் ஒரு தமிழ் இளைஞன் சிரித்துப் பேசிக் கொண்டிருந்த காட்சி, கீழே தெருவில் நடந்து சென்ற சிலரின் கண்களுக்கு விருந்தாகி யிருக்க வேண்டும். அவர்கள் கழுத்து வலிக்க அண்ணாந்து பார்த்துக் கேலிப் புன்னகையுடன் சென்றனர். மற்றும் சிலரோ எதிரே வந்தவர்களுடன் மோதிக் கொண்டனர். இதைக் கண்ட பிறகுதான் சபேசனுக்கு ஒரு விஷயம் புத்தியைத் தொட்டது. 'தனியே இருக்கும் இந்த இளம் பெண்ணுடன் இப்படி நான் சாவதானமாக உட்கார்ந்து பேசிக் கொண்டிருப்பது சரியல்ல; சுரேஷ் பாபு வந்தால் அவருக்கும் இது நல்ல விதமாகப் படாது.'

''உன் அப்பா வர நேரமாகும்போல் இருக்கிறதே! நான் புறப்படட்டுமா?'' என்றவாறு எழுந்தான் அவன்.

ஏதோ சொல்ல வாயெடுத்த சந்தியா அதைச் சொல்லாமல் அவனையே சில விநாடிகள் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு, ''சரி'' என்று தலையசைத்தாள்.

சபேசன் அங்கிருந்து புறப்பட்டான். கீழே படிக்கட்டின் ஓரமாக வைத்திருந்த தன் கோணிப் பையையும் மறக்காமல் எடுத்துக் கொண்டான்.

அன்றிரவு அவன் சமைக்கும் வேலையில் இறங்கவில்லை. அளவுக்கு மீறிய உற்சாக மகிழ்ச்சியில் மனம் கிளர்ந்துகிடந்ததால் குஷியாக ஹோட்டலுக்குப் போய்ச் சாப்பிட்டு விட்டு வந்து, கொஞ்சம் பொழுதோடேயே படுத்து விட்டான். ஆமாம்; அன்று மாலை எப்படியும் வேதாவைப் பார்க்கச் செல்ல வேண்டுமென்றிருந்த எண்ணத்தை அவன் அடியோடு மறந்து தூங்கியும் போனான்.

மறு நாள் காலை. சபேசன் வழக்கம்போல் எட்டு மணிக்குக் கோணிப் பைகளுடன் வெளியே கிளம்ப ஆயத்தமாகிக் கொண்டிருந்த சமயம், ''உள்ளே வரலாமா?'' என்ற குரல் கேட்டு அவசரமாக எட்டிப் பார்த்தான். அந்த அறையின் கதவாக உபயோகப்படும் செருகுப் பலகையொன்றைப் பிடித்தவாறு நாணமும் கிலியுமாக நின்று கொண்டிருந்தாள் வேதா. அவனது அறையைத் தான் தேடிக் கண்டுபிடித்து வந்து விட்ட சந்தோஷமும் அவள் முகத்திலே நிலவியது.

திகைப்படைந்து போன சபேசன் சற்று நேரம் அப்படியே அசையாமல் இருந்து விட்டுப் பிறகு தன்னை ஒருவாறு சமாளித்துக்கொண்டு, ''அடடே, நீயா! என்ன இப்படித் திடீரென்று?'' என்றான் அசட்டுச் சிரிப்புடன்.

வேதாவின் முகம் வாடித் துவண்டது. அவள் மௌனமாகத் தலை குனிந்து நின்றாள்.

''நானே உன் வீட்டுக்கு வரவேண்டுமென்றுதான் இருந்தேன். நேரமே கிடைக்கவில்லை'' என்றபடி கோணிப் பைகளை மடித்துக் கட்கத்தில் இடுக்கிக் கொண்டான் சபேசன்.

அவள் முகம் சற்றே மலர்ந்தது. ஆச்சரியத்துடன் அவ்வறையை எட்டிப் பார்த்தாள்.

''ஆமாம்; இந்த இடத்தை நீ எப்படிக் கண்டுபிடித்துக்கொண்டு வந்தாய்?''

''அன்றைக்கு நீங்கள் சொல்லவில்லையா, தங்கசாலைத் தெருவில் வாடகைக்கு அறை பிடித்திருப்பதாக?''

''ஓ, ..... அந்தச் சின்னக் குறிப்பில் இத்தனை சரியாகக் கண்டுபிடித்துக்கொண்டு வந்து விட்டாயே!''

மறுபடியும் வேதாவின் முகம் வாடியது. அவள் எங்கோ பார்த்தபடி பேசாதிருந்தாள்.

''உன்னை நான் நினைக்காத நாளே இல்லை'' என்று சிரித்த சபேசன், பெட்டி மேல் கிடந்த சீப்பையும் கண்ணாடியையும் எடுத்துச் சுவரில் திருப்பி மாட்டினான்.

வேதாவின் முகம் குப்பென்று சிவந்து மலர்ந்தது. அவளை ஆவலுடன் ஏறிட்டு நோக்கினான்.

''அது சரி; என்ன விஷயம்? ஏதாவது சொல்ல வேண்டுமா? பாவம், இவ்வளவு தூரம் சிரமப்பட்டு வந்திருக்கிறாயே!''

வேதா மீண்டும் முகம் வெளுத்துத் தலை குனிந்தாள். உடனே ஒருவித ஆக்ரோஷத்துடன் பின்னால் நகர்ந்து, ''ஒன்றுமில்லை. நான் இங்கே கொஞ்சம் தையல் நூல் வாங்குவதற்காக வந்தேன். வேறு விசேஷமில்லை'' என்று சொல்லிக்கொண்டே விருட்டென்று திரும்பி விரைந்து சென்றுவிட்டாள்.

பிரமை பிடித்தவன்போல் நின்று அவளையே பார்த்துக் கொண்டிருந்தான் சபேசன்.

அவனுக்கு அன்றெல்லாம் மனமே சரியாக இல்லை. ஆனால் ஜல்லி வியாபாரம் மிக நன்றாக நடந்தது. ஏழெட்டு ரூபாய்க்கு மேல் இலாபம். அந்த மகிழ்ச்சியைக்கூட அவனால் அனுபவிக்க முடியவில்லை. ஏதோ ஒரு பெரும் தவறு செய்துவிட்டது போன்ற உணர்ச்சியே அவன் உள்ளத்தில் ஊசி முனையாக உறுத்திக் கொண்டிருந்தது. இதற்குக் காரணம், அன்று காலை தென்றலைப்போல் வந்த வேதா, புயலைப்போல் சீறிக்கொண்டு போனதுதான்.

'அவள் ஏன் வந்தாள்?' — இது முதல் கேள்வி. 'அப்படி வந்தவளை வா என்றுகூட நான் வரவேற்காமல் அலட்சியம் காட்டியது ஏன்?' — இது இரண்டாவது வினா. 'அதற்காக அவளுக்கு ஏன் அவ்வளவு கோபம் வர வேண்டும்?' — இது மூன்றாவது கேள்வி. 'அவள் கோபப்படுவாள் என்பது தெரிந்திருந்தும் அதைப் பொருட்படுத்தாமல் நான் அப்படி நடந்துகொண்டது ஏன்?' — இது நாலாவது வினா.

இவற்றுக்கெல்லாம் தனக்குச் சாதகமாகவும், தன்மீது தவறு இல்லாத விதமாகவும், தன்னை உயர்வாக்கிக் கொள்ளும்படியாகவும் எத்தனையெத்தனையோ சமத்காரமான பதில்களைத் தேடிச் சொல்லிப் பார்த்துச் சமாதானம் செய்துகொண்ட பின்னும் அந்தக் குற்ற உணர்ச்சியிலிருந்து அவனால் கடுகளவும் மீளவே முடியவில்லை. எவ்வளவுக்கு எவ்வளவு அவன் அதிலிருந்து மீண்டு மேலே ஏற

முயன்றுனே, அத்தனைக்கு அத்தனை அதல பாதாளத்தில் சரிந்துகொண்டேயிருந்தான். அவனுடைய ஒவ்வொரு வாதமும் அவனுக்குப் பிரதிவாதமாகவே திரும்பி, அவனைக் குத்திக் குடைந்தன. இறுதியில் அவன் மன நோக்காட்டோடு ஒரு முடிவுக்கு வந்தான்.

'நான் என்ன, தெய்வமா? இல்லை; மனிதன் தான். அந்த மனிதனிலும் சாதாரண மனிதன். சராசரி மனிதன். பலப் பல ஊனங்கள் மலிந்த — குறைகளும், பலவீனங்களும் நிறைந்த — மனிதன். ஆகவே, என்னை மற்றவர்கள் மட்டுமல்ல; இனி நானேகூட முழு மனிதனுக நினைப்பது தவறு.'

அவனைப் பற்றி முதன் முதலாக இன்று தான் இந்த முடிவுக்கு வந்தான் அவன். இப்படி வந்ததுமே, அதில் உள்ள வேதனையை, அவமானத்தை அவனுல் தாளவே முடியவில்லை. தன்னுடைய சுய ரூபத்தின் இழிந்த கோலத்தைத் தானே அந்தரங்கமாக ஒரு கணம் ஏறிட்டுப் பார்ப்பதுதான் எத்தனை கொடுமை நிறைந்த அநுபவமாக இருக்கிறது!

சோர்வும் களைப்புமாகத் தன் அறைக்கு வந்த சபேசன் கோணிப் பைகளை ஒரு மூலையில் எறிந்துவிட்டுப் பேசாமல் உட்கார்ந்து விட்டான். மனத்தில் ஒரு புதிய கவலை புகுந்தால் அங்கு ஏற்கனவே புதைந்து மறைந்து கிடக்கும் வேறு பல கவலைகளையும் அது கிளறி எடுத்து இறைத்துவிடும் என்ற உண்மையும் இப்போது அவனுக்குப் புலனாகியது. ஆமாம்; இறந்துபோன அவனது தாயைப் பற்றிய கவலையில் ஆரம்பித்து, பர்மாவிலிருந்து திரும்பி வராமலிருக்கும் தந்தையைப் பற்றிய கவலை வரை அவனை இழுத்துக் கொண்டு போய் விட்டது.

'என் தந்தை இன்னமும் வராமலிருக்கும் காரணம் என்ன? அத்தானும், அத்தையும் சொன்னது உண்மைதானே? அவருக்கென ஒரு குடும்பத்தை அமைத்துக் கொண்டு அவர் அங்கேயே தங்கி விட்டாரோ? அதனுல் என்னை அடியோடு மறந்து விட்டிருப்பாரோ! அல்லது அந்தத் திருச்சினாப்பள்ளி ஆசாமி சொன்னதுபோல் இந்தியாவுக்குத் திரும்பிவிட்டிருப்பாரோ? விசாகப்பட்டினத்தில் இறங்கி வேறெங்கேனும் என்னைத் தேடிக்கொண்டு அலைவாரோ? அல்லது இந்தச் சென்னையிலேயே எங்கேயாவது தங்கியிருந்துகொண்டு என்னைக் கண்டுபிடிக்கும் முயற்சியில் ஈடுபட்டிருப்பாரோ? ஒருகால் நான் கிராமத்திலிருந்து திரும்பி வந்தபின் அவர் அங்கு போய்ச் சேர்ந்து விட்டிருப்பாரோ? அப்படிப் போனவர் அங்கே நான் இல்லாததால் மனம் உடைந்து மறுபடியும் என்னைத் தேடிக் கண்டுபிடிக்கப் புறப்பட்டு விட்டிருப்பாரோ? நானும் இதுவரையில் என் அத்தைக்கோ, அத்தானுக்கோ ஒரு கடிதாசியும் போடவில்லை. அதனுல் அவர்களும், எழுத முடியாது. என் விலாசம் தெரியாததால்...'

அவன் சட்டென்று எழுந்து நின்றுன். அவசரமாகப் போய்த் தன் கான்வாஸ் பையைத் திறந்து, துணிகளுக்கு அடியில் கிடந்த தாகூரின் 'கனி கொய்தல்' புத்தகத்தை எடுத்துப் பக்கங்களைப் பரபரவெனப் புரட்டினுன்.

'தொலைந்து போன நாட்களைப் பற்றி
நீ அழுதுகொண்டும் சிந்தித்துக்கொண்டும்
இருக்கிறுய், பரிதபிக்கத் தக்க இதயமே!
இனி வரும் நாட்களைப் பற்றி இனிது
சிந்தித்து இன்புறுவாயாக! -
யாத்ரிகனே, மணி அடிக்கிறது!
பாதை பிரியும் இடத்தில் நீ
விடைபெற்றுக் கிளம்புவாயாக!...'

அவன் முகம் மலர்ந்தது. நெஞ்சில் புதிய தெம்பு ஊற்றெடுத்தது. சுறுசுறுப்புடன் போய்க் குளித்துவிட்டு வந்து வேறு உடை அணிந்துகொண்டு, வழக்கத்துக்குக் கொஞ்சம் அதிகமாகவே கவனம் செலுத்தித் தலை வாரி எண்ணெய்ப் பசையின்றி முகத்தைத் துடைத்துக் கொண்டு, செருகுப் பலகைகளைப் போட்டு அறையைச் சாத்திவிட்டு வெளியே கிளம்பினுன்.

எங்கே? சந்தியாவைப் பார்க்கத்தான்!

''ஓ, சபேசனு?... வா, தம்பி, வா!'' — கூடத்து அறையில் உட்கார்ந்திருந்த சுரேஷ் சௌத்ரி மகிழ்ச்சியுடன் வரவேற்றுர்.

சபேசனுக்கு ஒரே வியப்பு! கவுண்டன் பாளையம் அகதிகள் முகாமில் பார்த்த சுரேஷ் பாபுவா இவர்? அந்த எளிய வறுமைக் கோலத்துக்கும், இப்போதைய வளமைப் பளபளப்புக்கும்தான் எவ்வளவு வித்தியாசம்!

''வணக்கம், பாபு!'' என்று பணிவுடன் கூறித் தயங்கி நின்றுன் சபேசன்.

''ஆஷோன்! ... ஒஷியர், போஷோன்!'' என்றுர் சுரேஷ் அன்புடன்.

கூச்சப் புன்னகை புரிந்த சபேசன் அவர் எதிரே போய்ப் பிரம்பு நாற்காலியொன்றில் அமர்ந்த பிறகுதான் அங்கே சுவர் ஓரமாக இன்னெர் ஆள் உட்கார்ந்திருப்பதைக் கண்டான். அந்த ஆள் உருது தினசரியொன்றைப் பிரித்துப் படித்துக்கொண்டிருந்ததால் அவனுடைய முகத்தைப் பார்க்க முடியவில்லை.

''நேற்று இங்கே வந்தாயாமே! என் மகள் சந்தியா சொன்னுள். நான் மிகவும் சந்தோஷப்பட்டேன்'' என்றுர் சுரேஷ் சௌத்ரி.

'' ஆமாம், பாபு! தற்செயலாகத்தான் பார்த்தேன். ஆச்சரியப்படத் தக்க சந்திப்பு'' என்று சொன்ன சபேசனின் பார்வை அவனையறியாமலே சமையலறைப் பக்கம் சென்றது. அங்கே வளையல் குலுங்கும் மெல்லொலி!

சுரேஷ் சௌத்ரி தம் பின்னுல் உட்கார்ந்திருந்த அந்த மனிதனிடம் வங்க மொழியில் ஏதோ கூறிப் புன்னகை செய்தார். உடனே, தூக்கிப் பிடித்திருந்த பத்திரிகை தாழ்ந்தது.

சபேசன் உள்ளுறத் திடுக்குற்றுன். காரணம், அங்கே உட்கார்ந்திருந்தவன் அந்தத் தடித்த குள்ளமான வாலிபன்தான்! கவுண்டன்பாளையம் அகதி முகாமில் பார்த்த அதே வாலிபன்.

''அது சரி, சபேசன்! நீ இப்ப என்ன வேலை செய்யறே?'' என்று விசாரித்தார் சுரேஷ்.

சற்றே தயங்கிய சபேசன், ''தாற்காலிகமாகச் சிறிய வேலை ஒன்றுதான் இப்போது செய்து கொண்டிருக்கிறேன், பாபு! பிரின்டிங் பிரஸ்களிலிருந்து பேப்பர் கட்டிங் பீஸ்களைப் பர்சேஸ் பண்ணி, வேஸ்ட் பேப்பர்

கம்பெனிகளிலே ஹோல் சேல்ஸா போட்டுடறேன். அந்தருக்கு நாலு அல்லது ஐந்து ரூபாய் கிடைக்கும்'' என்றான் தலை குனிந்துகொண்டே. அவனுக்கு அந்த வாலிபனைப் பார்த்ததாலோ என்னவோ அங்கு உட்கார்ந்திருக்கப் பிடிக்கவில்லை.

தட்டில் மூன்று தேநீர்க் கோப்பைகளுடன் அழகுப் பதுமை போல் வந்த சந்தியா அவற்றை மேசைமீது வைத்துவிட்டு மௌனமாகத் திரும்பிப் போய்விட்டாள்.

சபேசனின் உற்சாகம் அடியோடு குன்றியது. கொஞ்சம் அவசரமாகவே தேநீரைப் பருகிவிட்டு, ''அப்ப, நான் வரட்டுமா பாபு?...'' என்றான்.

''புறப்பட்டு விட்டாயா? என்ன, இதற்குள்?'' என்றார் சுரேஷ்.

''கொஞ்சம் வேலை இருக்கிறது...'' என்று புன்முறுவலுடன் இழுத்தான் சபேசன். மனிதனுக்குக் கடவுள் இந்தச் 'சிரிப்பு' என்ற அழகிய கவசத்தைக் கொடுக்காதிருந்தால் அவன் யாரிடமும் பேசிப் பழகவோ, நல்லவன் என்று பெயரெடுக்கவோ முடியாது!

பத்திரிகை படித்துக்கொண்டிருந்த அகதி வாலிபன் தன் முகத்தைக் காட்டாமலே ஏதோ சொன்னான். அதை மிகக் கவனமாகவும், பணிவோடும் காதைச் சாய்த்துக் கேட்டுக்கொண்ட சுரேஷ் சௌத்ரி இள நகையுடன் சபேசன் பக்கம் திரும்பி, ''சரி; உன்னிடம் ஒரு முக்கியமான விஷயம் பற்றிப் பேச விரும்புகிறேன். அது உனக்கு லாபகரமாகவும் இருக்கும். நாளை இந்நேரத்துக்கு இங்கு வருகிறாயா?'' என்றார்.

சபேசனுக்கு உள்ளூற வியப்பாயிருந்தது. ''ஆகட்டும், பாபு!'' என்றவாறு செல்ல எழுந்தான். அதே சமயம், யாரோ வராந்தாவில் நடந்து வரும் காலணி ஒலி கேட்டது.

பத்திரிகை படித்துக்கொண்டிருந்த அகதி வாலிபன் சட்டென்று அதை வீசியெறிந்துவிட்டுத் துள்ளி எழுந்து, ''ஹலோ, டியர் காம்ரேட்! கம் இன், கம் இன்!'' என்றான் மகிழ்ச்சியுடன்.

மூக்குக் கண்ணாடி அணிந்து, ஹாட்டும் சூட்டுமாக இருந்த நெட்டை மனிதர் ஒருவர் இடது கையிலிருந்த தோல் பையை வலது கைக்கு மாற்றிக்கொண்டு இடது கையை உயர்த்தி, ''குட் ஈவ்னிங்!'' என்று இளஞ்சிரிப்புடன் கூறியவாறு உள்ளே வந்தார். கவுண்டன்பாளையம் அகதி முகாமுக்கு அடிக்கடி பஸ்ஸில் வந்து இந்தத் தடித்த வாலிபனோடு டீக்கடையில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருப்பாரே, அந்த மலையாளிப் பேர்வழிதான் அவர்!

சுரேஷ் சௌத்ரியிடமும், அகதி வாலிபனிடமும் அளவுக்கு மீறிய ஒரு பரபரப்புக் காணப்பட்டது. அவர்கள் அவரை மிகுந்த அன்பாகவும் மரியாதையாகவும் வரவேற்று உபசரித்தார்கள். அந்த மும்முரத்தில் சபேசனை யாரும் ஒரு பொருட்டாகவே மதிக்கவில்லை; அவன் அங்கிருந்து போனதையும் அவர்கள் கவனிக்கவில்லை. (தொடரும்)

## இலக்கிய நோக்கு 1965



உறையின் மேல் ''இலக்கிய நோக்கு-1965'' என்று குறிப்பிடவும். இது விஷயமாகக் கடிதப் போக்குவரத்து வைத்துக் கொள்வதற்கில்லை. பிரசுரமாகாத கட்டுரைகளைத் திரும்பப்பெற விரும்புவோர் தங்கள் விலாசமிட்ட தபால் தலையுடன் **கூடிய ஓர் உறையை உடன் அனுப்ப வேண்டும்.**

கலைகளுக்கெல்லாம் உறைவிடமான சரஸ்வதி தேவியே எந்நேரமும் படித்துக் கொண்டிருக்கிறாள் என்பது நம் நாட்டு ஐதிகம்.

அவளை வழிபடும் நம் தமிழ்நாட்டு மக்கள் எல்லையற்ற இலக்கிய ஆர்வம் உள்ளவர்கள். கிடைக்கும் நேரத்தில் ஏதாவது நூலைப் படித்து இன்புற வேண்டும் என்ற ஆர்வம் கொண்டவர்கள்.

அவர்களது ஆர்வத்தை அறிந்துகொண்டவே போல் எத்தனையோ புத்தகப் பதிப்பகங்கள் நாள்தோறும் நூல்களைத் தேடி வெளியிட்டு வருகின்றன. உலகம் பலவிதம் என்பதுபோல் இலக்கியத் துறையிலும்தான் எத்தனை வகை நூல்கள்! கதை, கட்டுரை, கவிதை, நாவல், நாடகம், சரித்திரம் என்று எண்ணிக் கொண்டே போகலாம்.

இலக்கிய ஆர்வம் உள்ள நமது நேயர்கள் எத்தனையோ நூல்களைப் படித்து இன்புற்றிருப்பார்கள். ரத்தினச் சுருக்கமாகச் சிறப்பான விமரிசனம் எழுதியனுப்பினால், அவற்றைக் 'கல்கி' மிக மகிழ்ச்சியுடன் வெளியிடும். ஆனால் ஒரே ஒரு நிபந்தனை. நேயர்கள் விமரிசனத்துக்கு எடுத்துக்கொள்ளும் நூல்கள் — அவை இலக்கியத்தின் எந்தப் பகுதியைச் சார்ந்தவையாக வேண்டுமானாலும் இருக்கலாம். 1965ம் ஆண்டு வெளிவந்தவையாக இருக்க வேண்டும். நேயர்கள் தீட்டும் கட்டுரையில் எந்தப் பிரசுராலயம் வெளியிட்டது, எந்த வருஷம், எந்த மாதம் வெளியிட்டது, என்ன விலை என்ற விவரங்களை மறக்காமல் குறிப்பிட வேண்டும். சிறந்த விமரிசனத்துக்கு உகந்த பரிசு உண்டு. கட்டுரை அனுப்பி வைக்க வேண்டிய கடைசித் தேதி: 18–3–66. பல நேயர்களின் விருப்பத்துக்கிணங்க, நேயர்கள் இன்னும் ஆர்வத்தோடு கலந்து கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தோடு முடிவுத் தேதியைக் **கொஞ்சம் தள்ளியே வைத்திருக்கிறோம் என்பதையும் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.**







**Khosla Fans**

INDIA PRIVATE LIMITED

ரீஜினல் ஆபிஸ் :

**கோஸ்லா எஞ்சினீயரிங் கம்பெனி**

2-A, வடக்கு இரஸண்ட் ரோடு
தியாகராயநகர், சென்னை -17
போன் : 84140

## தென்னிந்தியர்களின் சுவைக்கேற்றபடி பிரத்தியேகமாகத் தயாரிக்கப்பட்டது






# ஜி.பி

# பெருங்காயம்

**உயர்தர மிஸ்கி கலவை**
கோபால்ஜீ அண்டு கம்பெனி, 218, சாமுயல் ஸ்ட்ரீட், பம்பாய் 3

**ஏஜெண்ட்: தென் இந்தியா**
கோபால்ஜீ அண்டு கம்பெனி, 203, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, தபால் பெட்டி எண் 1255, மதராஸ்-1

**ஏஜெண்டுகள் தேவை—**
**எல்லா முக்கிய பலசரக்கு கடைகளிலும் கிடைக்கும்.**

அத்தியாயம் 30

# நிறைவு

படுக்கை அறையில் சுமழ்ந்த ஊதுவத்தியின் மணத்தையும் மல்லிகைச் சரங்களின் இயற்கை மணத்தையும் தென்றல் குளுமையுடன் குழைத்துக் கூட்டிக் கொணர்ந்தது. வராந்தாவில் ஒரு சாய்வு நாற்காலியில் அமர்ந்திருந்த தங்கப்பனைச் சுற்றிச் சூழ்ந்தது. திருமணப் பந்தலில் அவன் அணிந்திருந்த ரோஜா மலர் மாலையைப் போலவே மென்மையும், நளினமும் நிறமும் அழகும் மணமும் மிகுந்த இரு கரங்கள் அவனுக்குப் பின்புறத்திலிருந்து நழுவி வந்து அவன் தோள்களை மெல்லப் பற்றிப் பின் கீழிறங்கி வந்து அவன் நெஞ்சில் விரல்கள் விரிந்து படர நின்றன. தங்கப்பன் வானிலே மிதக்கும் முழு மதியையே பார்த்துக்கொண்டிருந்ததால் பொறுமையுற்றது போல் இங்கே ஒரு முழுமதி அவன் கன்னத்தில் விளையாட்டாக உரசியது. இதயத்தில் நிறைய நிறையப் பெருகித் தன்னைத் திக்குமுக்காட வைத்த பேரின்பத்தைச் சமாளிக்க முயன்றான். மெய்சிலிர்ப்போடு அவன் சிரம் நிமிர்ந்து உயர்ந்து, குனிந்து நின்ற அவள் நெஞ்சில் முட்டிப் புதைந்தது. அவள் கரங்களை அவன் பற்றி இழுத்து அவள் வதனத்தை இன்னும் அருகில் கொணர்ந்தான்.

அத்தானின் விஷமத்தை ரசித்த செல்வம் கலகலவென்று சிரித்தாள். ''பொல்லாதவர்'' என்று கூறி அவன் கேசத்தைத் தன் விரல்களால் கலைத்தாள். இப்பால் நகர்ந்து வந்து அவனுக்கு




முன்னால் தரையில் அமர்ந்து கொண்டாள். அவன் மடியில் சிரம் சாய்த்தாள். அந்தத் தருணத்தில் புது மெருகு குன்றாத தாலிச் சரடு அவள் கண்களுக்குத் தென்பட்டது. தன் கழுத்தில் தொங்கி மார்பில் தவழ்ந்த அதனை மெல்லப் பெருமிதத்தோடு எடுத்துப் பார்த்துக் கண்களில் ஒற்றிக் கொண்டாள். அதைக் கவனித்து விட்ட தங்கப்பன் மெல்லச் சிரித்தான்.

''செல்வம்! என்னை அடைய முடியுமோ முடியாதோ என்று ரொம்பவும் பயந்து கொண்டிருந்தாயல்லவா நீ?'' என்று கேட்டான்.

''மிருணாளினியிடம் நீங்கள் நெருங்கிப் பழகியது அவளையும் அவளைச் சேர்ந்த ஒரு சதிகாரக் கும்பலையும் வளைத்துப் பிடிக்கத்தான் என்பது எனக்குத் தெரியாமல் போய் விட்டது அத்தான். அசடுதானே நான்! அவர்களைப் பற்றிய முழு விவரங்களையும் அறிந்து கொள்ளத்தான் நீங்கள் அவள் கூறுவதை யெல்லாம் ஏற்றுக் கொள்வது போல் நாடகமாடியிருக்கிறீர்கள். நட்புரிமையுடன் உறவாடியிருக்கிறீர்கள். இதெல்லாம் எனக்குக் கடைசிவரையில் புரியவேயில்லை!'' வியப்பும் அத்தானின் சாமர்த்தியத்தைக் கண்டு கொஞ்சம் கர்வமும் தொனிக்கப் பேசினாள் செல்வம்.

தங்கப்பன் வருத்தத்துடன் தலையசைத்துச் சூள் கொட்டினான். ''நீமட்டுமென்ன? போலீஸாரும், ஸி.பி.ஐ. அதிகாரிகளும் கூட அப்படித்தான் நினைத்துக் கொண்டிருக்

றார்கள்! நான் இதைப் பற்றி நாலு பேரி டம் அதிகமாகப் பேசுவதைக் கூட அவர்கள் விரும்பவில்லை! இதைச் சூசகமாக அவர்களே வெளியிட்டார்கள் என்னிடம்! காரணம் என்ன தெரியுமா? பயங்கரமான இந்தச் சதிச் செயலைக் கண்டுபிடித்துச் சகலரையும் கைது செய்த பெருமையிலும் புகழிலும் எனக்கு அதிகமாகப் பங்கு கிடைத்து, அவர்கள் பங்கு குறைந்துவிடக் கூடாதே என்ற கவலை அவர்களுக்கு!

''ஆனால் உண்மையில் அவர்களும் நீயும் இன்னும் எல்லோருமே ஏமாந்துதான் போனீர்கள்!

''மிருணாளியிடம் நான் கொண்ட சிநேகம் வெறும் நடிப்பு இல்லை, செல்லம்! அது ஆத் மார்த்தமான நட்பு! அவளை இன்னமும் நான் மிக உயர்வாகத்தான் மதிக்கிறேன்.

''செல்லம்! ஒவ்வொருவர் வாழ்விலும் எதிர்காலத்தில் நாம் என்னவாக விளங்கப் போகிறோம் என்று நிர்ணயிக்க வேண்டிய ஒரு கட்டம் வருகிறது. அந்தத் தருணத்தில் மிருணாளினி ஏதோ ஒரு முக்கிய காரணத்தி னால் ஒரு தீவிர கம்யூனிஸ்டாக விளங்கத் தீர்மானித்தாள். பணக்காரக் குடும்பம் ஒன் றில் பிறந்த அவள் இந்த முடிவுக்கு வருவ தென்றால் அந்த நிகழ்ச்சி அவள் உள்ளத்தைப் பலமாகத் தாக்கிச் சிந்தனைப் போக்கையும் வெகுவாகப் பாதித்த ஒன்றாகத்தானிருக்க வேண்டும். அந்தச் சம்பவம்தான் என்ன? என்று அலசி ஆராய நான் முயன்றதுண்டு. 'என்றேனும் ஒரு நாள் என் கதை முழுவதை யும் உங்களுக்குச் சொல்லுகிற மனப் பக்கு வத்தை நான் அடைந்து விட்டால் அப்போது நீங்கள் கேளாமலே நானே கூறுவேன்' என்று அவள் ஒரு முறை என்னிடம் சொன்னாள். ஆனால் மனம் விட்டுப் பேசக் கூடிய சந்தர்ப் பம் அவளுக்குக் கடைசி வரையில் ஏற் படவேயில்லை!''

தங்கப்பன் தன் கண்களில் துளித்து நின்ற நீரை ஒரு விரலால் துடைத்துச் சுண்டி எறிந்தான்.

''எந்த ஒரு விஷயத்தைப் பற்றியும் ஒளிவு மறைவின்றி என்னிடம் பேசி வந்தாள் அவள். தன் வாழ்க்கை முறையை, சிந்தனைப் போக்கை மாற்றியமைத்த ஒரு சம்பவம் நிகழ்ந்தது என்பதைக் கூட மறைக்க முடி யாத அவளால் அந்த நிகழ்ச்சி என்ன என் பதை மட்டும் வெளியிட முடியவில்லை. இந்த விதத்தில் எனக்குப் பெருந் தோல்விதான் செல்லம்! அவளுடைய நெருங்கிய நண்பன் என்று சொல்லிக் கொண்டும், அவள் இத யத்தை என்னால் அணுக முடியவில்லை. அந்தச் சம்பவத்தைப் பற்றி அறிந்துகொண்டு அவ ளுக்கு ஆறுதல் அளிக்கும் ஆற்றல் எனக்கு இருக்கவில்லை. சிரித்துச் சிரித்துப் பேசிய அவள் மனம் ரகசியமாகச் சோகத்தில் ஆழ்ந் திருந்தது. இது என் ஒருவனுக்குத்தான் தெரி யும். உறவினர்கள் என்று யாரையும் அழைக் காத அவள் என்னிடம்தான் அத்தியந்தமாக நட்புறவு கொண்டாடினாள். ஆனால் சிநேக தர்மத்தைக் காப்பாற்றி அவளைத் தேற்றும் திறமைகூட எனக்கு இல்லாமல் போய் விட்டது.''

தங்கப்பனுடைய துக்கத்தில் பங்கு கொண்டு சற்று நேரம் மௌனமாக இருந் தாள் செல்லம். ''ஆண்டவனிடத்தில் தனக்கு நம்பிக்கை இல்லை என்று மிருணாளினி அக்கா என்னிடம் சொல்லியிருக்கிறாள் அத் தான். ஆனால் அவள் பூஜைக்குரியவள் என்று எனக்குப் படுகிறது.''

''நூற்றுக்கு நூறு உண்மை செல்லம்! தனக்குச் சரி என்று தோன்றிய ஒரு லட்சி யத்துக்காக இறுதி மூச்சுவரை போராடிய வள் அவள். அவளையும் என்னையும் ஒப்பிட்டுப் பார்த்தால் அவள் மேன்மை உனக்கு இன் னும் நன்றாக விளங்கும்.

''நான் ஒரு தொழிலகத்தை நடத்தினேன். நேர்மையாளன் என்று மார்தட்டிக் கொண் டேன். ஆனால் நேர்மையாக வாழ்ந்து பணம் பண்ண முடியாது என்று கண்டதும் சுயநலத் துக்காக என் லட்சியங்களை ஒதுக்கி வைத்து விட்டு லஞ்சம் கொடுத்தேன். கணக்கு வழக்கு களில் மோசடி செய்தேன். கருப்பும் வெளுப்பு மாகப் பணம் சேர்த்தேன். 'இதில் பெருமைப் பட என்ன இருக்கிறது? முதலாளி என்று கூறிக்கொண்டேன். உள்ளூற கம்யூனிஸ சித்தாந்தங்களை ஏற்றேன். ஜனநாயகவாதி என்று கூட்டத்துக்குக் கூட்டம் மக்கள் முன் னால் முழக்கினேன். தேர்தலில் ஒரு முறை தோல்வியுற்றதும் தனி ஒருவனின் தோல்வியை இந்நாட்டில் ஜனநாயகமே அடைந்த தோல் வியாக மாற்றிவிட நினைத்தேன். சர்வாதி காரத்துக்கு அடிகோல முயன்றேன். அதற் காகவே சதிக் கூட்டத்தினரில் நானும் ஒருவ னேன். பிறகு அதிலும் நிலைக்காமல் அவர்களைக் காட்டிக் கொடுத்துத் துரோகம் செய்தேன். என்னைவிடக் கேவலமான ஒரு வேஷதாரியை எங்கேயாவது காண முடியுமா? மனிதன் எப்படி நடந்து கொள்ளக் கூடாது என்ப தற்கு உதாரணமாக என் வாழ்க்கை அமைந்து விட்டது, செல்லம்!''

''அத்தான், இப்படியெல்லாம் பேசா தீங்க! நீங்க மட்டும் அப்படித் துணிந்து செயலாற்றாமல் இருந்தால் இந்நேரம் இந்தத் தேசத்தில் அராஜகம் தாண்டவமாடும். அதை மறந்துவிடுவதா நான்?''

''உனக்கென்ன, 'ஜனநாயகக் காவலன்' என்று எனக்குப் பட்டம்கூடக் கட்டிவிடு வாய் நீ! ஆனால் உண்மையில் இந்த நாட்டில் ஜனநாயகத்தைக் காப்பாற்றியது அந்தச் சீனனின் அசட்டுத்தனம்தான். அவன்மட்டும் இன்னும் இருபத்து நாலு மணி நேரம் தன் முகத்தை எனக்குக் காட்டாமலே இருந் திருந்தானானால் என் மனமும் மாறியே இருக்காது!''

''ஆனாலும் கடைசிவரை அவன் விட்டுக் கொடுக்கவும் இல்லையே! தீனதயாளுவின் காரியாலயத்துக்கே ஒரு கொலைகாரனை அனுப்பி விட்டானே, பாவி! அந்தச் சமயத் தில் இசைகேடாக ஏதாவது நேர்ந்திருந் தால்......'' செல்லம் அதை நினைத்துப் பார்க்கவே அஞ்சியவளாகப் பயந்து நடுங்

னுன். அத்தானின் கால்களை இறுகப் பிடித்துக் கொண்டாள்.

''அதற்கு முன்பே நான் இறந்திருக்க வேண்டியவன்தான், மிருணாளினியின் கரத்தால்.... ஆனால் அவள் ஏன் தயங்கினுள்? லட்சியத்துக்காக எதையும் செய்யத் துணிவேன் என்றவள் தன்னைத் தானே அழித்துக் கொள்வானேன்?''

''அதைப் புரிந்து கொள்வதில் சிரமம் இல்லையே, அத்தான்? அக்கா உங்களை மனமாரக் காதலித்தாள். என் பொருட்டுத் தன் காதலை அவள் தன் உள்ளத்துக்குள்ளேயே ஒரு கருஞ்சனைப் போல் பொத்திப் பொத்தி வைத்துப் பாதுகாப்பதாக எனக்கு வாக்குக் கொடுத்தாள்.''

தங்கப்பன் திகைத்தான். அவனுடைய காதலுக்குப் பாத்திரமானதாகத் தீர்மானமாகத் தெரிந்த அந்தக் கணத்திலேயே அவன் உள்ளம் தூய்மை பெற்று ஆயிரம் கோடி சூரியர்களின் பிரகாசத்துடன் ஒளிர்வது போல் அவனுக்கு ஓர் எண்ணம் உண்டாயிற்று. 'செல்வத்தைக் கேளுங்கள். அவளுக்குத் தெரியும்' என்று அவள் கூறிய அந்த வார்த்தைகள் ஏதேதோ சந்தர்ப்பங்களில் நிகழ்ந்த ஏதேதோ சம்பவங்களுக்கு இந்த விநாடியில் புதுப் புது அர்த்தங்களைக் கற்பித்துக் கொடுத்தன. மென்மையான நுட்பமான ஆயிரமாயிரம் இனிய உணர்வுகளைப் பெற்று அவன் புள்கித்தான்.

தன் காதலுக்குரிய தங்கப்பனைத் தன் கையாலேயே மாய்த்துவிட அவளால் முடியவில்லை. தன் லட்சியங்கள் சரியத் தானே காரணமாவதையும் அவளால் பொறுக்க முடியவில்லை. அந்த இக்கட்டான நிலையில் அவளுக்குப் புலப்பட்டது ஒரே வழிதான்!...

''கடைசிவரையில் உனக்குக் கொடுத்த வாக்கை அவள் மீறவேயில்லை, செல்வம்'' என்றுன் அவன் கரகரத்த குரலில்.

அவன் கரத்தை எடுத்துத் தன் கன்னத்தில் ஒற்றிக் கொண்டாள் செல்வம் ஆறுதலாக. ''உஷா இனிமேல் என்ன செய்யப் போகிறுன் அத்தான்? நம் கல்யாணத்துக்கு வந்திருந்தபோது அவள் தோற்றத்திலும் குணத்திலும் அடியோடு மாறி விட்டிருந்தாளே?'' என்றுள்.

''அது ஒரு பெரிய அதிசயம்தான், செல்லம்! அவள் அப்பா உயர் பதவியில் இருந்த வரைக்கும் அவளிடம் நாம் கண்ட அலட்சியம், ஆணவம், அதிகார தோரணை கேலிச் சிரிப்பு எல்லாமே போலிதான் என்று என்னும்படி அப்படியே மறைந்து போய் விட்டன, இருந்த இடம் தெரியாமல். அவள் உள் மனமே பெரிதாகி வியாபித்து இந்த வெளித் தோற்றத்தைத் தன்னுள் விழுங்கிவிட்டு முன் நின்றது. அவள் சோகமே உருவாக, அன்புக்கும் ஆதரவுக்கும் ஏங்குபவளாக, தனிமையில் கிடந்து தவிப்பவளாக மாறி விட்டாள்.

''அன்று அவள் நடந்து கொண்டதை நினைத்தால் எனக்கு இப்போதும் வியப்பாக இருக்கிறது. டெலிபோன் செய்தி கேட்டு உஷாவும் மகேசுவரியும் ஓடோடியும் வந்தார்கள். தினதயாளு இறந்து கிடக்கும் அந்தக் கோரக் காட்சியைக் கண்டதும் உஷா நடுநடுங்கிப் போய் விட்டாள். அவளை அணைத்து ஆசுவாசப்படுத்தத் தன் கைகளை நீட்டியபடி ஓரடி முன்னுல் எடுத்து வைத்தாள் மகேசுவரி. ஆனால் உஷா அந்தக் கரங்களை ஒதுக்கித் தள்ளிவிட்டு ஒரே ஓட்டமாக என்னிடம் ஓடி வந்து பச்சைக் குழந்தை போல் ஒண்டிக் கொண்டு அழுதாள்.

''அவள் கண்ணீர் ஓயவே இரண்டு நாட்கள் ஆயின. அப்புறமும் என்னவெல்லாமோ சொல்லிப் புலம்பினுள். 'ஆண்டவன் என்னை மன்னிக்கவே மாட்டார், எனக்கு நாதியில்லை, நீங்களும் என்னை விரும்ப மாட்டீர்கள், வெறுக்கவே செய்வீர்கள்' என்றெல்லாம் கதறினுள். அத்தனை படாடோபத்திலும் வாழ்க்கை வசதிகளிலும் செல்வச் செழிப்பிலும் ஒரு பொருளும் இல்லை என்பதைப் புரிந்து கொண்டாளோ என்னவோ, 'எனக்கு இதெல்லாம் அலுத்து விட்டது; என்னை எங்கேயாவது கண்காணுத இடத்துக்கு அழைத்துப் போங்கள்! எனக்கு வாழ்க்

கவனத்துக்கு...



கல்கிக்குக் கதை கட்டுரைகள், துணுக்குகள் எழுதி அனுப்புங்கள். வரவேற்கிறோம்.

ஆனால் தயவு செய்து வேறு ஒரு பத்திரிகைக்கு அனுப்பி வைத்திருக்கும் கதை கட்டுரை அல்லது துணுக்கையே கல்கிக்கும் அனுப்பி வைக்காதீர்கள்.

துணுக்குகள் ஒவ்வொன்றும் தனித் தனித் தாளில் காகிதத்தின் ஒரே பக்கத்தில் விலாசத்தோடு எழுதப் பட்டிருக்க வேண்டும்.

பிரசுரமாகாதவற்றைத் திரும்பப் பெற விரும்பினுல் தங்கள் விலாசமிட்ட, தபால் தலையுடன் கூடிய ஓர் உறையை உடன் வைத்து அனுப்புதல் வேண்டும். இவை சம்பந்தமாகக் கடிதப் போக்குவரத்து வைத்துக் கொள்வதற்கில்லை. —ஆசிரியர்



''சாயந்திரம் ஆறு மணிக்கு ஜவுளிக்கடை பக்கமா என் மனைவியோடே வருவேன். நீ குறுக்கே பாஞ்சு என் மணி பர்சைப் பிடுங்கிகிட்டு ஓடணும்.''

''சரிங்க; அந்த மணிபர்ஸிலே எவ்வளவு ரூபாய் இருக்கும்?''

''ரூபாயா? உன் வேலைக்கு எட்டணா கூலியும், கத்தை கத்தையா வெறும் காகிதமும் அதிலே இருக்கும்!''

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

கற்றுக் கொடுங்கள்!' என்று திரும்பத் திரும்பக் கெஞ்சினாள்.

''அவளுக்கிருந்த பயத்தை யெல்லாம் நீக்கிச் சமாதானப்படுத்த நாலு நாட்கள் அவளுடனேயே இருந்தேன். செல்லம்! நான் மனம் வைத்திருந்தால் அவளை ரொம்பச் சுலபமாக என் மனைவியாக்கிக் கொண்டிருக்கலாம். உஷாவும் மனப் பூர்வமாக என்னைத் தஞ்சம் அடைந்திருப்பாள். தீனதயாளுவின் ஆத்மாவும் சந்தோஷப்பட்டிருக்கும். எந்த உயர் நிலையை அடைய வேண்டும் என்று நான் இரவு பகலாகக் கனவு கண்டு அதற்காக உழைத்தேனோ அந்தச் சிகரத்தில் நான் நின்றேன். ஆனால் அதை வெற்றியாக என்னால் கருத முடியவில்லை. அந்தத் தருணத்தில் என் மனம் உன்னைத்தான் நாடியது. உன்னுடைய காதலில் நீ வைத்திருந்த அசைக்க முடியாத நம்பிக்கை என்னை உன்னிடம் இழுத்து வந்து விட்டது!''

''என்னைத் தவிக்க விட்டு விட்டு அப்படியெல்லாம் நீங்கள் செய்தால் நான் சும்மா பார்த்துக் கொண்டா இருப்பேன் என்று நினைக்கிறீர்கள்? உங்கள் காதைப் பிடித்துத் திருகி இழுத்து வந்து...''

செல்லத்தின் விரல்கள் செல்லமாக அவன் காதருகே குறுகுறுத்தன.

''தாலி கழுத்தில் ஏறிய பிறகு நீ என்ன தான் பேச மாட்டாய்!'' என்றான் தங்கப்பன் கிண்டலாக.

''உண்மையாகவே எனக்கு மனநிம்மதி இல்லை, செல்லம்! நான் செய்த முதல் பெரிய தவறு மக்களைக் குறைவாக மதிப்பிட்டதுதான். ஜனநாயகத்தில் அவர்களுக்குள்ள பற்றுதலை வளர்ப்பதற்குப் பதிலாக ஜனநாயகத்துக்கு இவர்கள் லாயக்கற்றவர்கள் என்று நான் முடிவு செய்ததுதான் அடிப்படையான குற்றம். இதற்குப் பிராயச்சித்தம் செய்தாக வேண்டும் நான். ஜனநாயகத்தில் குறைபாடுகள் இருக்கலாம். ஆனால் அதைவிடச் சிறந்த ஆட்சி முறை ஒன்று கிடையாது என்று பிரசாரம் செய்வதையே இனி என் வாழ்நாளின் முக்கியமான குறிக்கோளாக நான் வகுத்துக் கொள்ளப் போகிறேன். மாருதி ஸார் அடிக்கடி சொல்வார், 'தம்பி! நம் மக்களைப் பேராபத்து சூழ்ந்துவிடாமல் இருக்க வேணுமானால் இங்கே ஜனநாயகம் வெற்றி பெற்றே தீரவேண்டும்' என்று. அந்த வெற்றி இந்தக் கட்சியிலோ அல்லது மாற்றுக் கட்சியிலோ அடங்கியிருக்கவில்லை. மக்கள் விழிப்போடு இருக்கிறார்களா என்பதொன்றையே சார்ந்திருக்கிற விஷயம். நாம் திருப்தி காணக் கூடாத, முடிவில்லாத போராட்டம் அது! மக்களை இதற்குத் தயாராக்கப் போகிறேன் நான். எனக்கு உஷாவும் துணை புரிவதாகச் சொல்லியிருக்கிறாள். அவளுக்கும் வாழ்க்கையில் ஒரு பிடிப்பு ஏற்பட அந்த நல்ல பணி உதவும் இல்லையா?''

''அப்படியே நல்ல கணவனுக அவள் அடையவும் வழி ஏற்பட வேண்டும்'' என்றாள் செல்லம்.

''வருவான், வருவான்! அவளுக்கென்று ஒருவன் பிறந்துதான் இருப்பான்... ஆனால் செல்லம், இதற்கெல்லாம் முன்னதாக நான் இன்னொரு காரியமும் செய்ய வேண்டும். அப்போதுதான் என் மனம் நிம்மதி பெறும்!''

''என்ன அத்தான் அது?''

''ஆட்சியைக் கவிழ்க்கவும், பணம் சேர்க்கவும் நான் செய்த குற்றங்களை ஒப்புக் கொண்டு கொஞ்ச காலம் சிறையில் இருந்துவிட்டு வரவேண்டும். என் உள்ளம் இப்போது தாய்மை பெற்று விளங்கினாலும் உலகில் மனச்சாட்சியின் உறுத்தலின்றி நான் உலவி வர அது அவசியமென்று நினைக்கிறேன்.''

இப்படிச் செய்ய வேண்டாம் என்று கெஞ்சினாலோ, கூடாது என்று முரண்டு பிடித்தாலோ அத்தானுக்குப் பிடிக்காது என்று அஞ்சினாள் செல்லம். ஆகவே, ''அதைப் பற்றி இப்போது என்ன அத்தான்? பிறகு பார்த்துக் கொள்ளலாம். இந்த விநாடியில் நம் முன் இன்றைய இரவு நீண்டு கிடக்கிறதே'' என்றாள். கொடியாக அவனைச் சுற்றி வளைத்தாள். மேலும் ஏதோ பேச முற்பட்ட அவன் வாயில் இளந் துளிர் போன்ற அவள் விரல்கள் தாளம் போட்டன. அதற்கேற்ப அவள் இமைகள் படபடத்தும், இதழ்கள் துடிதுடித்தும் ஆடின. ஆத்மார்த்தமான அந்த இணக்கத்திலும் நெருக்கத்திலும் தங்கப்பன் சுற்றுப்புறச் சூழ்நிலைகளை யெல்லாம் மறந்தான். தென்றல் அவனைத் தீண்டவில்லை; மல்லிகையின் மணத்தை அவன் உணரவில்லை! தன்னையே இழந்து நின்ற அவனுக்காகக் காலச்சக்கரமே சுழலுவதை நிறுத்தி விட்டிருந்தது!

(முற்றும்)

# இது லஞ்சம் என்றால் குற்றமில்லை

" தித்திக்கும் பேச்சு சொல்லி பை நிறைய புஸ்தகங்கள் திணித்துஎன்னை பள்ளிக்கூடம் அனுப்பப் பார்க்கறேளா? முடியாது. முதலில், கை நிறைய நியூட்ரீன் மிட்டாய்களை கொடுங்கள்!

" நியூட்ரீன் டாபிகளும், மிட்டாய்களும் எவ்வளவு ருசியானவை என்று எனக்கு தெரியும். அவைகள் நல்ல தேக பலம் என்று அப்பா சொல்லுவார். நியூட்ரீன் கொடுக்க உங்க அப்பாவிடம் சொல்லு. "








மிட்டாய்கள், டாபிகள்

நியூட்ரீன் கன்பெக்ஷனரி கம்பெனி (பிரைவேட்) லிட்.
சித்தூர் — ஆந்திரப் பிரதேசம்

# தாஷ்கெண்டில் திருமணம்

**சுத்தானந்த பாரதியார்**

**நா**ன் 1952ல் ரஷ்யாவைச் சுற்றியபோது தாஷ்கெண்டில் பத்து நாட்கள் இருந்தேன். அங்கே சலவைக் கல்லால் ஆன அழகான ஷாநவாய் இயேட்டர் உள்ளது. அதில் பதினாயிரம் பேர் உட்காரலாம். அங்கே அரிய நாடகங்களைப் பார்த்தேன். உஸ்பெக் பாஷையில் இனிய பாடல்களும் ஆடல்களும் நிகழ்ந்தன. நானும் கலை விழாக்களில் பங்கு கொண்டு எனது ஆங்கில, பிரெஞ்சுப் பாடல்களைப் பாடினேன். என் பாடல்களுக்குப்



பியானோ வாசித்து அபிநயம் பிடித்தனர் கலைவாணர். தாஷ்கெண்டு இஸ்லாமியர் நகர்.

அப்துல்லா என்ற இசைப் புலவர் என் பாடல்களை விரும்பி நல்ல மெட்டமைத்து என்னுடன் பாடினார். அவர் பாடும்போதெல்லாம் கூட்டத்தில் ஒரு பெண் கைதட்டி ஆரவாரம் செய்தாள். அவளுடன் நான் பேசிய போது அறிந்தது:

'அவள் தந்தைக்கு 105 வயது: அவள் இரண்டு தடவை காதலித்தாள். காதலர் இறந்தனர். மனம் வெறுத்துக் கலியாணம் என்றாலே சீறி விழுந்தாள். அவளது முதற் காதலனின் தம்பியே அப்துல்லா. அவன் அவளை விரும்பினான். அவள் நடனமாடுவாள். ஆனால் மனக் கவலையால் கலையைக்கூடக் கருதாதிருந்தாள். ஒரு நாள் ஷாநவாய் இயேட்டரில் நான் இரண்டு கட்டை சுருதி வைத்துக் கொண்டு பாடினேன். சில வரிகளைச் சொல்லுகிறேன்:

''அமைதி எங்கே? அன்பெங்கே? சொல்வாய் தாஷ்கெண்ட் புறவே! இங்கே நகைத்துக் கைகுலுக்குவார்; அங்கே பகைத்து ஆயுதப் புரட்சி செய்வார்; இங்கே சமாதான மகாநாடு; அங்கே சமாதானத் தீர்மானம் சுக்குநூறாகும். இங்கே மினுக்குப் பேச்சு; அங்கே போர் முரசு! இங்கே விருந்து, அங்கே விரோதம்; இரத்த வெள்ளம் ஓடுகிறது.''

இவ்வாறு அரசியல் உலகம் கலக நாடகமானதைப் பாடினேன். எல்லோரும் கைதட்டினார்கள்.

அவருள் நூற்றைந்து வயதுக் கிழவர் ஒருவர் எழுந்து, 'மீரு மீரு ந்ராஸ்த் ரூவிச்' என்று ஆரவாரம் செய்தார். ரஷ்ய பாஷையில் இதன் பொருள் ''சாந்தமே! சமாதானமே! காலை வந்தனம். அமைதியான காலை புலர்க!''

காலையில் அந்தக் கிழவர் என்னைத் தம் வீட்டுக்கு அழைத்தார். அவருக்கு ஆங்கிலம் நன்றாகத் தெரிந்தது. அவர் அந்த வயதிலும் கல்லூரியில் பௌதிக விஞ்ஞானம் சொல்லித் தந்தார். எனக்கும் விஞ்ஞானத்தில் கருத்துண்டு. ஆதலால் அவருடன் விஞ்ஞானப் பேச்சே அதிகமாகப் பேசினேன். அவர் தமது மோட்டாரைத் தாமே ஓட்டினார். அவர் வீடு ஓர் அழகான பழச் சோலையில் உள்ளது. அங்கே ஆப்பிளும் ஆரஞ்சும் அபரிமிதம். போகும் வழியே பருத்திப் பண்ணைகளையும் ஆலைகளையும் நாங்கள் பார்த்தோம். தாஷ்கெண்ட் பருத்தி விளையும் நிலம். உழுது, விதைத்து, அறுவடை செய்து, பஞ்சடித்து நூற்று, நெய்து, துணிகளைப் பெரிய பெரிய மூட்டைகளாகக் கட்டி நாடெங்கும் அனுப்புவது வரையில் எல்லாம் யந்திரத்தால் இயன்றன. பல நிறமுள்ள பருத்திகள் அங்கே விளைந்தன. அவைகளை நெய்து அருவி போல் மேலேயிருந்து யந்திரங்கள் பொழியும் காட்சி வியப்பைத் தரும். பல நிறப் பூக்கள் அருவியுடன் கலந்து பொழிவது

போலிருக்கும். சோவியத் ரஷ்யாவுக்கு வேண்டிய ஆடைகளெல்லாம் அங்கே நூற்று நெய்யப்படுகின்றன. நூற்புப் பொறிகளைப் பெண்களே இயக்குகிறார்கள். ஒரு பெண் சுமார் முப்பது நூற்புப் பொறிகளை மேற்பார்க்கிறாள். உலகின் மிகப் பெரிய நெசவாலைகளில் தாஷ்கெண்டு நெசவாலையும் ஒன்றாகும்.

## 2

விஞ்ஞானக் கிழவர் "என் பேரன் பேத்திகள் இங்கே வேலை செய்கிறார்கள்" என்றதும் அவர்களைப்பார்க்க நானும் விரும்பினேன். 'அதோ அவர்கள் பஞ்சு மூட்டைகளை அவிழ்த்து யந்திரத்தில் கொடுக்கிறார்கள். நூற்புப் பொறிகளை இயக்குகிறார்கள் — ஐந்து பேத்திகள்.' தாத்தாவைக் கண்டதும் அவர்கள் புன்னகை பூத்து, "இது தேசத்தின் நேரம்" என்றனர். தாத்தா கைச்சாடையால் "தேசத்துக்குப் பாடுபடுங்கள்" என்று கூறிவிட்டுப் பேரன்மார்களிடம் சென்றார். அவர்கள் நெசவாலையில் சுறுசுறுப்பாயிருந்தனர். தாத்தாவைக் கண்டதும் "கடமையின் கடுமை" என்று தங்கள் வேலையில் கண்ணாயிருந்தனர். 'கடமைதான் பொதுவுடைமை' என்று தாத்தா மேலே சென்றார். தாத்தா வீடும் பருத்திப் பண்ணை அருகேதான் இருந்தது. வீட்டின் முன் கார் நின்றது. பைன் மரத்தால் ஆன அழகிய வீடுதான். அதில் அவரும் அவர் மனைவியும் மகளும் இருந்தனர். மகள் ஒருதரம் மணம் புரிந்து கணவனை இழந்தாள். மறுபடியும் ஒருவன் மணம் புரிவதாகச் சொன்னான். அவனும் நரம்பு நோயால் இறந்தான். வாழ்வின் துயரங்களைக் கண்டு மகள் தனியாகவே வாழ்ந்து வந்தாள். ஆடவரையே வெறுத்தாள். தந்தைக்கு இது ஒரு கவலை.

அவர்கள் இஸ்லாமியர் ஆதலால் இஸ்லாம் பெயரையே வைத்துக் கொண்டிருந்தார்கள். கிழவர் யாகோப் மிகாயன், கிழவி சலீமா யாகோப், மகள் ஃபாதிமா. இவர்களைச் சுற்றி ரஷ்யர்களும் வசித்து வந்தனர். இவர்கள் அல்லாவைத் தொழுவர்; கடவுளை நம்பி வணங்குவர். ரஷ்யர் உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வர்.

அன்னை சலீமா பரபரப்புடன் எழுந்து எங்களை வரவேற்று இரத்தினக் கம்பளம் விரித்து அமர்த்தினாள். உஸ்பெக் பாஷையில் "யாகோப், இவர் இந்தியக்கவியோகி; நமாஸ் செய்பவர்; குரான் படித்தவர்" என்று அறிமுகப்படுத்தினார். அம்மையார், "ஸலாம்" என்று புன்னகை புரிந்தார். ஃபாதிமா உற்சாகமாக எழுந்து தோட்டத்துக்கு ஓடி ஆப்பிள், ஆரஞ்சு, ஸ்ட்ராபெரி, திராட்சைப் பழங்களைச் சேர்த்து வந்தாள். ஒரு பிளாஸ்டிக் தட்டில் அவற்றை வைத்தாள். மற்றொரு சிறிய இரத்தினக் கம்பளத்தை விரித்து அதன் மேல் தட்டை வைத்தாள். இது தாஷ்கெண்டு பாணி. தாஷ்கெண்டில் வீட்டுக்கு வீடு இரத்தினக் கம்பளங்கள் அடுக்கியிருக்கும். அவை அவர்களுக்கு ஓர் ஆஸ்தியாகக் கருதப்படுகிறது.

சலீமா மற்றொரு தட்டில் பெரிய ரொட்டி கொணர்ந்தாள். அது தலைப்பாகை மாதிரி இருந்தது. நான்கு குண்டர்கள் வயிறாரச் சாப்பிடலாம். அவ்வளவு பெரிது! யாகோப் ரேடியோவைத் திருகி விட்டார். அது இனிய உஸ்பெக் கீதங்களைப் பாடியது. உஸ்பெக் பாட்டு அசாவேரி ராகத்தில் நீட்டி நெளித்துச் செல்லும். ரேடியோ பாடும் போது ஃபாதிமா நடனமாடத் தொடங்கினாள். அவள் முப்பது வயதுக்காரி. உடம்பு கட்டு மஸ்தானவள். இடுப்பு வாகவமாக வளைந்து லாஸ்ய லக்ஷணங்களுடன் ஐந்து நிமிஷங்கள் நடனமாடியதும் என் கையில் இனிய திராட்சைகளைத் தந்து "உண்ணுங்கள்" என்றாள். நான் ஆளுக்கு ஒவ்வொரு திராட்சை தந்து "உண்ணுங்கள்" என்றேன்.

"விருந்தாளி உண்ட பின்பே நாங்கள் உண்பது" என்றார் யாகோப்.

"நான் விருந்தாளி இல்லை. உங்கள் தம்பி!" என்றேன்.

"அப்படியானால் இந்தாருங்கள், இந்த ரொட்டியில் பாதி உமக்கு" என்று வெட்டிக் கொடுத்தார் அவர்.

"இதில் அரைக்கால் பங்குகூட நான் உண்ண முடியாதே" என்று கொஞ்சம் பிட்டு எடுத்து மிச்சத்தை ஃபாதிமாவிடம் தந்தேன்.

"சித்தப்பா பங்கு எனக்குக் கிடைத்தது. இதை உண்ண இன்னோர் ஆள் வேண்டும்" என்றாள் ஃபாதிமா.

அப்போது கலகலவென்று பேச்சுக் குரல் கேட்டது. ஆலையில் வேலை செய்த பேரன்மார்களும் பேத்திமார்களும் உற்சாகமாகக் கனிகளைக் கொண்டு வந்து வைத்து அன்பு பாராட்டினார்கள். அவர்களுடன் ஒரு கனவான் வந்தார். அவர் இனிய பாடகர். பருத்திப் பண்ணையில் நாடக அரங்கம் உண்டு. அதில் நடிகருக்குப் பாட்டுச் சொல்லித் தருபவர். அவரே எனது நண்பர் அப்துல்லா.

யாகோபின் கூடம் நிரம்ப அனைவரும் அமர்ந்தனர்; அவர்கள் உட்கார மற்றோர் இரத்தினக் கம்பளம் விரிக்கப் பெற்றது. "இதுதான் ஃபாதிமா கலியாணத்துக்கு என்று தயாரிக்கப் பெற்றது" என்றாள் சலீமா. நான் ஏதோ பேச்சு வாக்கில் "இதில் நமது இசைப் புலவர் அப்துல்லா அமரட்டுமே; ஆடலும் பாடலும் இங்கே அவதரித்திருக்கின்றன" என்றேன்.

"அப்படியே உட்காருகிறேன்" என்று பாடகர் அப்துல்லா அதில் கம்பீரமாக அமர்ந்தார். நான் ஃபாதிமாவைப் பார்த்தேன். அவள் நாணப் புன்னகையுடன் மூலையிலேயேதான் நின்றாள். "உட்காரலாமே?" என்றேன். சிறிது நாணிக் கோணி அப்துல்லாவைக் கடைக்கண்ணால் பார்த்துவிட்டு உட்கார்ந்தாள். ஏதோ வெட்கம் அவளைப் புல்லரித்தது. உடம்பு காந்தம் கண்ட ஊசி போல் நடுங்கிக் கொண்டுதான் இருந்தது. இதை யாகோபும் உணர்ந்தார்.

ஃபாதிமா திடீரென்று உள்ளே சென்று உடைகளைப் புதுமையாக்கிக் கொண்டு ஒரு ஜாடியில் பழ ரசம் கொண்டு வந்தாள். ஆளுக்கொரு கிண்ணத்தில் பழரசம் ஊற்றினாள். அப்துல்லாவுக்கு ஊற்றும்போது கிண்






Amul
BUTTER







ணம் நிரம்பி இரண்டு சொட்டு கீழே வழிந்தது. நாங்கள் சிரித்தோம். நான், ''அளவுக்கு மிஞ்சிய அன்பு'' என்றேன். பேரப் பிள்ளைகள் கைகொட்டிச் சிரித்தனர். அப்துல்லா ''மனம் நிரம்பியது'' என்று கூறி அவன் கையைப் பிடித்து நிறுத்தினான். ''எங்கள் மனம் நிரம்ப வேண்டும்'' என்று சிரித்தோம்.

3

உணவுப் படலம் முடிந்தது. கைகழுவி வாய் கொப்புளித்தோம். நான் யாகோபிடம் தனித்து, ''ஃபதிமாவுக்கு எப்போது கலியாணம்?'' என்று கேட்டேன்.

''கல்யாணம் என்றால் அவளுக்குக் கோபம் வருகிறது. இரண்டு காதலர்கள் அவளை ஏமாற்றி விட்டனர்'' என்றார்.

''ஏமாற்ற முடியாத ஒரு காதலர் இங்கே வந்திருக்கிறாரே'' என்றேன்.

யாகோப், ''அல்லாவின் சித்தம் எப்படியோ. நாங்கள் முஸ்லிம்கள். சோவியத் அரசாங்கம் கடவுளை நம்பவில்லை. என்றாலும் தாஷ்கெண்டில் உள்ள முஸ்லிம்கள் கடவுளிடம் ஈடுபட்ட தெய்வ பக்தர்கள்'' என்று கூறினார்.

நாங்கள் சிறிது வெய்யிலில் காய்ந்து சூடேறி மீண்டும் கூடினோம். தோட்டத்தில் உலாவும்போதே ஃபதிமாவும் அப்துல்லாவும் கடைக்கண் உறவு கொண்டனர். புன்னகை புன்னகையுடன் கலந்தது. இருந்தாலும் இருவர் நடுவிலும் ஒரு மர்மத் திரை விழுந்திருந்தது. காந்தமும் ஊசியும் நாணத்தால் விலகி யிருந்தன.

நாங்கள் மீண்டும் கூடத்தில் கூடினோம். சலீமா ஒரு ஜாடியில் ஏதோ வைத்துக் கண்

# அமீனா புகுந்த வீடு

நேசக் கரம்



எங்கள் குடும்பத்தில் நான் ஒரு பெரும் சுமையாக இருந்தேன். நான் அப்படி ஒன்றும் ஒதுக்கப்பட வேண்டியவளுமல்ல! நான் அழகிதான் என்பதைப் பிறர்சொல்லக் கேட்டவள் தான்! இருப்பினும் என்னை மணக்க ஒருவரும் வரவில்லை! இரண்டோர் இடம் என்னைத் தேடி வந்தும்அவர்கள் கேட்கும் தொகை என் தகப்பனாரிடம் இல்லாததால் நிறைவேறாமல் போய் விட்டது. எனக்கொரு விடிவே இல்லையோ என்று ஏங்கித் தவித்தேன். எனக்குக் கீழே இரண்டு தங்கைகள் மணமாகக் காத்திருக்கிறார்கள். பணம் இல்லையேல் இவ்வுலகில் வாழவே வழியில்லை என்பதை நன்றாக உணர்ந்து கொண்டேன்.

அத்தி பூத்தாற்போல் ஒருநாள் என் வாழ்க்கையில் ஒரு திருப்பம் ஏற்பட்டது. எனக்கு வாழ்வு தரவும், என் குடும்பத்தார் கவலை தீர்க்கவும் வேற்றூரிலிருந்து என்னைப் பெண்ணெடுக்க வந்திருந்தார்கள். அவர்கள் எங்கள் குடும்பத்தை ஒத்த வசதி படைத்தவர்கள்தான். இருப்பினும் மாப்பிள்ளை மேற்கொண்டு படிக்க வேண்டும் என்று இரண்டாயிரம் ரூபாய் கேட்டார்கள். எதனால் என் கல்யாணம் தடைப்பட்டு நின்று போனதோ, அதுவே இப்போதும் தலை தூக்குவதை நினைத்து ஏங்கிப்போனேன். அவர்கள் கேட்பதும் நியாயம்தானே? மேற்கொண்டு படிக்கும் திறன் இருக்கிறது. படிக்க வசதி இல்லை. அதைப் பெண் வீட்டார் மூலம் நிறைவேற்றிக் கொள்வதில் என்ன தப்பு இருக்கிறது? என் தகப்பனார் முகத்தில் ஈயாடவில்லை. இரண்டாயிரம் ரூபாய்க்கு எங்கே போவோம்! ஒரு வாரத்தில் முடிவு சொல்வதாக அனுப்பி வைத்தோம்.

என் தகப்பனார் ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவராய் எங்கோ சென்றார். சென்ற ஒரு மணி நேரத்துக்குள் மூவாயிரம் ரூபாயுடன் வீடு திரும்பினார். நிறைந்த சந்தோஷத்தோடு சிறப்பான முறையில் என் கல்யாணம் நடைபெற்றது. நான் பூரித்துப் போனேன்.

ஆறு மாதங்களுக்குப் பின் ஒருநாள்! அந்நாள் எங்கள் வாழ்க்கையில் ஏற்பட்ட பேரிடியாகும். ஆமாம். வீடு தேடி, கோர்ட் ஆர்டரோடு அமீனா வந்து நின்றான். வீடு ஏலம் என்றால் எங்கள் ஊரில் தலை நிமிர்ந்து வாழ முடியுமா? ஏழையானாலும் கண்ணியத்தோடு வாழும் பரம்பரையாயிற்றே! என்ன செய்வதென்றே எங்களுக்குத் தோன்றவில்லை. ஏன்தான் இவ்வுலகில் பெண்ணாய்ப் பிறந்தோமோ என்று நினைக்கத் தோன்றியது எனக்கு.

இந்தச் சந்தர்ப்பத்தில் என் கணவருக்குத் தூரத்து உறவுக்காரப் பெரியவர் ஒருவர் என்னை அழைத்து வரும்படி ஆள் அனுப்பியிருந்தார். எதற்கு என்பது புரியாமலேயே அவர் வீடுசென்றேன். என்னைத் தனியாக அழைத்து என் கையில் மூவாயிரத்து ஐந்நூறு ரூபாய் கொடுத்து 'உன் வீட்டில் நடப்பதெல்லாம் எனக்குத் தெரியும். வீடு தேடி வந்த அமீனாவிடம் வட்டியோடு கடனைச் செலுத்திவிட்டு மீதியை வைத்துக்கொள். உன் தாய் தந்தைக்கு மட்டும் நான் கொடுத்ததாகச் சொல். வேறு எவரிடமும் இதைப் பற்றி ஒன்றும் சொல்லாதே! உனக்கு எப்போது பணம் கொடுக்க முடிகிறதோ அப்போது கொண்டுவந்து உன் கடனைத் தீர்த்துவிடு. இதற்காக நீ எந்த விதக் கவலையும் கொள்ளாதே. எவ்வளவு நாட்களானாலும் பரவாயில்லை' என்று கூறி ரூபாயைக் கொடுத்தார். அவர் கையை எடுத்து என் கண்களில் ஒற்றிக் கொண்டேன். அந்தக் கடனை இதுவரை தீர்க்கவும் இல்லை. இப்பொழுது நான் காலேஜ் லெக்சரர் மனைவி. இவ்வளவு பெருந்தன்மையும் உதவி புரியும் தயாள குணமும் உள்ள பெரியவரை இது நாள்வரையில் பார்க்கவேயில்லை. இன்னும் இரண்டோர் வருடங்களில் அக்கடனைத் தீர்ப்பதற்கான முயற்சிகளைச் செய்து வருகிறேன்.

ஜெஸிமா பேகம்
முத்துப்பேட்டை

ஜாடிக் கோப்பைகளில் ஊற்றி ஊற்றிக் கொடுத்தான். அது என்ன? ரஷ்ய வாட்கா, சாராயம்.

''எனக்கு வேண்டாம். நான் பழரசம் உண்டேன். அது போதும்'' என்று கின்னத்தை அப்துல்லாவிடம் தந்தேன். அவன் அதை ஃபதிமாவிடம் தந்தான். அவள் வாங்கக் கூசினாள்.

''என்ன வேடிக்கை இது?
கண்ணைச் சிமிட்டிக் கொண்டு நிற்காதே.
தயங்காதே காதல் அளிக்கும் தேன் இது
இதைச் சுவைத்துப் பார்!''

என்று பொருள்பட நான் ஆங்கிலத்தில் பாடினேன். அதை யாகோப் மொழி பெயர்த்துச் சொன்னார்.

ஹஹஹஹஹஹா! என்று ஹாஹாகாரமும் ஜங்காரமும் செய்து கொண்டு 'பாலா லாய்கா' என்ற தந்தி வாத்தியத்தை மீட்டிக் கொண்டு அப்துல்லா ஒரு காதல் பாட்டுப் பாடினார்.

ஃபதிமா, ''காதல் எதற்கு? கவலை எதற்கு? கன்னியாகவே இருப்பேன்!'' என்று பாட்டி முடித்தாள். ''கல்யாணம் என்றால் கடுங் கோபம்'' என்றாள்.

அப்துல், ''நீ கன்னியாயிருப்பது பரி தாபம்'' என்று எழுந்து தன்னுடைய கையை விரித்தான்.

பிறகென்ன? ஃபதிமாவும் அவன் கையைப் பிடித்து நடனமாடினாள். அடடா ஆனந்த நடனம். குஷி குஷி! இந்தக் குஷியில் ஒரு தமாஷ். யாகோபும் சலீமாவும், ''உனக்கு நீ எனக்கு நான்'' என்று நடனமாடினர்.

நூற்று ஐந்து வயதுக் கிழவர், நூறு வயதுக் கிழவியுடன் நடனமாடவே, அந்தக் கூடமும் குதூகலித்தது. பேரன் பேத்திகளும் உல்லாசமாக நடனமாடினர். ஃபதிமா — அப்துல் ஆடல் பாடல் அமர்க்களம்! வெட்கத்திரை கீழே விழுந்தது. இருவரும் ஆடினர் — பாடினர்!

**மா**லை நான்கு மணி. எல்லோரும் மீண்டும் உணவுக்கு உட்கார்ந்தனர். எனக்குத் தேனும் பழரசமும் நிரம்பத் தந்தனர். மற்ற வர்கள் பழம், ரொட்டி, மீன், ஊன் எல்லாம் உண்டனர். ஸலீமாவுக்கு அன்று அளவுகடந்த மகிழ்ச்சி. ஃபதிமா இப்போது அப்துல்லாவின் பக்கம் பாந்தமாக அமர்ந்தாள். ஒருவர் கோப்பையில் ஒருவர் பானம் பாய்ந்தது. உள்ளங்கள் ஒன்றுபின.

''இப்போது கலியாணம் என்றால் கோபம் வருமா?'' என்று கேட்டேன். ஃபதிமா சிரித்தாள். அப்துல்லா சிரித்தான்.

''அவன் காதலன் தம்பியே நான். அண்ணன் பெற வேண்டிய இன்பம் தம்பிக் குக் கிடைத்தது'' என்று மகிழ்ந்தான் அப்துல்.

**வெ**ள்ளிக்கிழமை குத்பா ஓதிய பிறகு இருவருக்கும் திருமணம் ஆனது. அர சாங்கம் அவர்களைச் சதிபதிகளாகப் பதிவு செய்து கொண்டது.

திருமண விருந்தின்போது நான் பேசி னேன்:

''தாஷ்கெண்டில் நான்கண்ட அதிமனிதர், அதிசய மனிதர் யாகோபு. நான் கண்ட அதி சயக் காதலர் அப்துல் — ஃபதிமா. ஃபதிமா விவாகம் வேண்டாம், வேண்டாம் என்று சொன்னாள். வேண்டும்வேண்டும் என்று செய லில் காட்டினாள். நான் உங்கள் வீட்டுக்கு வந்த நாளில் இக்காதலர் ஆடிப் பாடிக் களித்ததை ஆயுளுக்கும் மறக்க மாட்டேன். இந்தக் குஷியில் இரண்டு கிழவர்கள் கலந்து நடனமாடினர். வெகு தமாஷா யிருந்தது. இதைத் தாஷ்கெண்டு திருமணம் என்று என்றும் நினைப்பேன். தமாஷாகத் தொடங் கியது நிக்காவில் முடிந்தது. தாஷ்கண்டு தமாஷ்கண்டு என்பேன். இங்கு நடந்த தமாஷ் கலியாணத்தை வாழ்த்துகிறேன்!''

அன்று அவர்கள் நடத்தின கடவுள் வழி பாடு மனத்தை உருக்கியது.

அப்துலும் ஃபதிமாவும் அவர்கள் வாசித்த பாலாலாய்காவைச் சோவியத் அரசாங்கத் தின் மூலம் எனக்கு அளித்தனர். அது என் அறையில் இன்னும் உள்ளது. இடையிடையே 'தும் தும்' என்று மீட்டுகிறது.



அஜீரணத்தை

# அகற்ற

பிலிப்ஸ்

## மில்க் ஆப் மெக்னீஷியா டாபிலெட்

## உடனடி நிவாரணமளிக்கிறது

4 மாத்திரைகள்
20 பைசா




ஒவ்வொரு சுவையான பிலிப்ஸ் மாத்திரையும் உடனடியாக அதனுடைய எடைக்கு 189 மடங்கு அதிகப்படியாக வயிற்றில் உண்டாகும் எரிச்சல், புளிப்பான ஏப்பம் முதலியவற்றை இயக்கும் சக்தியுள்ளதால், மற்ற எல்லா மாத்திரைகளையும் விட வெகு விரைவில் குணப்படுத்துகிறது.

குழந்தைகள் இதன் இனிமையான சுவையை மிட்டாய் போன்று விரும்பிச் சாப்பிடுகிறார்கள். இதில் பரபரப்போ, தொல்லைகளோ கிடையாது.
குடும்பத் தேவைகளுக்கு சிக்கனமான முறையில் 75 மற்றும் 150 மாத்திரைகள் கொண்ட பாட்டில்களில் கிடைக்கும்.
இப்பொழுதே உபயோகித்துப் பாருங்கள், எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்.

# பிலிப்ஸ்

## மில்க் ஆப் மெக்னீஷியா டாபிலெட்

மான்யுபாக்சரர்: ரிஜிஸ்டர்ட் யூஸர்
டேய்ஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் (மான்யுபாக்சரிங்) பிரைவேட் லிமிடெட்,
62, பண்டல் ரோட், கல்கத்தா-19

PXDW. TM1

# குடும்பக் கட்டுப்பாடு

## சில கருத்துக்கள்

தற்போது ஜனப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்தக் கருத்தடை யோசனைகளும் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டங்களும் கையாளப்படுகின்றன. கிராமப் பஞ்சாயத்து, பிளாக் டெவலப்மெண்டு கமிட்டிகளில் அங்கத்தினராக இருக்கும் எனக்கு இவைகளைப் பற்றி ஆதாரபூர்வமான உண்மைகள் தெரிகின்றன. குடும்பக் கட்டுப்பாடு திட்டம் சம்பந்தமாக நடந்ததோர் ஆராய்ச்சி அரங்கில் புள்ளி விவரங்கள் அறிவிக்கப்பட்டன. அவை எதைத் தெரிவித்தன தெரியுமா? மதத்தின் கோட்பாடுகளுக்கு விரோதமானது என்று நம்பிய கிறிஸ்தவர்களும், முகம்மதியர்களும் பெரும்பாலும் இந்த ஆபரேஷன்களைச் செய்துகொள்ள முன்வருவதில்லை. ஹிந்து மதத்தினர்தான் முன் வருகிறார்கள். அதிலும் நடுத்தரக் குடும்பத்தினர்தான் பற்றுக்குறையைச் சமாளிக்க இதற்கு உடன்படுகின்றனர். பணக்காரர்களுக்கு இயற்கையாகவே அதிகக் குழந்தைகள் இருப்பதில்லை. பிறந்தாலும் அவற்றை வளர்ப்பது பற்றிக் கவலை இல்லை. ஏழைகளோ எத்தனை குழந்தைகள் இருந்தாலும் "வாய் ஒன்று, கைகள் இரண்டு" என்ற உண்மையை உணர்ந்தாற்போல் குடும்பக் கட்டுப்பாடு திட்டத்தை ஆதரிப்பதில்லை. ஆகவே புள்ளி விவரங்களின் கணக்குப்படி நடுத்தரக் குடும்பத்தினர் வகுப்புத்தான் பாதிக்கப்படுகிறது! இதனால் விளையக்கூடிய விபரீதங்களை அனைவரும் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

ஏராளமான கருத்தடைச் சாதனங்கள் இலவசமாக விநியோகிக்கப்படுகின்றன. கருத்தடைச் சாதனங்களை விநியோகிப்பவர்கள் கிருமிநாசினிகளை விநியோகிப்பதில்லை. அகத்தில் உழலும் மக்கள் அவைகளை உபயோகித்தால் மேற்கொண்டு அசுத்தக் கிருமிகளையும் வலுக்கட்டாயமாக உடனுள் புகுத்துவதாகத்தானே ஆகிறது? அவர்கள் டெட்டால், விஸ்டரின் இவைகளை விலை கொடுத்து வாங்குவார்களா? இல்லை. சுகாதாரம் என்பதே அறியாத அவர்களுக்குக் கிருமிநாசினி மருந்துகளால் கையைக் கழுவிய பின்பே அவைகளை உபயோகிக்க வேண்டும் என்று தெரியப் போகிறதா? வியாதிகள் பரவவே இவை துணை புரிகின்றன.

என்னிடம் ஒரு வழக்கு வந்தது. ஒரு கிராமவாசி தன் மனைவி மாற்றான் ஒருவனுடன் நட்புக் கொண்டுள்ளதாகக் குற்றம் சாட்டினான். யாரோ ஒரு 'பரோபகாரி'யின் யோசனையின் பேரில் அவன் மனைவி 'லூப்' ஏற்பாடு செய்து கொண்டுள்ளாளாம். அவள் அத்து மீறிச் சென்றால்கூட இனி ஏதும் நேர வழியில்லையே. ஆகவே அவளை என்னால் நம்ப முடியவில்லை என்று புலம்பினான், அந்த அப்பாவிக் கணவன்.

கடைகளில் கருத்தடைச் சாதனங்கள் தண்ணீர் பட்ட பாடாகக் கிடைக்கின்றன. இலவச விநியோகம் குடும்பத்தினருக்கு மட்டுமே தரப்படுகிறதாயினும் கடைகளில் யார் வேண்டுமானாலும் இவைகளை வாங்கலாம். அதற்கு ஏதும் நிபந்தனைகள் இல்லை! தற்போது வெளிவரும் திரைப்படங்களால் பாதிக்கப்படும் இளம் வயதினருக்கு இம்மாதிரி சாதனங்கள் எத்தகைய மனக் கஷ்டங்களை உண்டாக்கும்? இளைஞர்களை இப்படிக் கடும் சோதனைகளில் ஆழ்த்துவது தர்மமா?

ஜனப் பெருக்கம் அதிகமானால் கஷ்டம் தானே என்று சிலர் வாதிக்கிறார்கள். நான் தொழில் நடத்தும் இடத்தில் தொழில் துறையில் பாரதம் மேனாட்டைப் பின்பற்ற வேண்டும் என்ற நினைப்பில் ஒரு நிலக்கரிச் சுரங்கத்தைப் பரீட்சார்த்தமாக இயந்திரம் மூலம் இயக்கத் தீர்மானிக்கப்பட்டது. இரண்டு லட்சத்துக்கும் மேலாக விலையுள்ள இயந்திரம் ஒன்று தருவிக்கப்பட்டது. சில நிபுணர்களும் முறைகளைக் கற்பிக்கத் தருவிக்கப்பட்டனர். ஆனால் வந்த நிபுணர்கள் இந்திய அரசின் வருமான வரியின் சுமை தாங்காது ஒருசில மாதங்களில் தாயகம் திரும்பி விட்டனர்! இன்று இயந்திரம் இயக்குவாரின்றிக் கேட்பாரற்றுக் கிடக்கிறது. இயந்திரம் பொருத்தப்பட்டதால் கூலிகள் வேலை செய்யவும் இயலாமல் இருக்கிறது. இப்படி ஒரு நிலை நான் அறிந்தது. இதைப் போல் இன்னும் எத்தனை எத்தனையோ?

நம் நாட்டில்தான் ஜனங்கள் ஏராளமாக இருக்கிறார்களே! பின்னர் இயந்திரங்கள் எதற்கு? இந்த மக்களுக்கு வேலை கொடுத்து வாய்ப்பளிக்கக் கூடாதா? இயந்திரங்களுக்குச் செலவிடும் தொகையை இவர்களுக்குச் செலவிட்டு வாழ வைக்கக் கூடாதா? மக்களுக்கு வேலை வாய்ப்பும் இதர வாழ்க்கை வசதிகளும் அளித்தால் அவர்கள் சிந்தனை பல திக்குகளில் சுழலும்போது ஜனப் பெருக்கம் இயற்கையாகவே குறைந்துவிடும்! இதுவே நேர் வழி.

மத்திய பிரதேசம்
10-2-66

லலிதா பரமேசுவரன்
அட்வகேட்
ஜூகராகண்டி நிலக்கரிச் சுரங்கம்

## "முருகன் புஜங்கப் பாமாலை"

"முருகன் புஜங்கப் பாமாலை" படித்து பேரானந்தம் அடைந்தேன். ஸ்ரீ ஆதிசங்கரரின் ஆழ்ந்த கருத்துக்கள் ஸ்ரீ சுப்பிரமணிய புஜங்கத்தில் உள்ளங்கை நெல்லிக்கனி போல் தெளிவாகத் தெரிகிறதைப் போல் ஸ்ரீ கலா பாரதி தமிழில் எழுதிய பாடல்களிலும் மிகவும் அழகாக அமைந்திருக்கிறது.

சேலம்
11-2-66 ஆலங்குடி வெங்கடநாராயணன்

Edited printed & published by T. Sadasivam on behalf of Messrs. Bharathan Publications Private Ltd., at the Kalki Press, Kilpauk, Madras-10

# டியாரா லானோலின் லோஷன் ஷாம்பூ

## தலை மயிரை பாதுகாக்க விரும்புகிறவர்களுக்கு!



இதர ஷாம்பூககளை உபயோகித்து உங்கள் தலைமயிர் வரள்வதனால் நீங்கள் மனவேதனை படுகிறீர்களா? அப்படியானால் உடனே இந்த புதிய இணையற்ற, ஜே. கே. ஹெலன் கர்டிஸாரால் தயாரிக்கபபட்ட லானோலின் லோஷன் ஷாம்பூவை உபயோகித்து பாருங்கள். இது உங்கள் தலை மயிருக்கு சகதியையும், அழகான தோற்றத்தையும், பளபளப்பையும் அளிக்கவல்லது. முதல் உபயோகத்திலேயே, இந்தியாவின் ஒரே தயாரிப்பான லானோலின் லோஷன் ஷாம்பூவே, நீங்கள் விரும்பத்தக்க ஷாம்பூ என்பதை தெரிந்து கொள்வீர்கள். இதர ஷாம்பூவினால் இழநத முக்கியமான சரும எண்ணையை திருப்பி அளிப்பது போலிருக்கும் லானோலின்! டியாரா லானோலின் லோஷன் ஷாம்பூ அதிக நுரை தரக்கூடியது. ஒவ்வொரு தலை மயிருக்கும் போஷாக்களிக்கிறது. அதி விரைவில் அழுக்கையும் சிக்கையும் போக்குகிறது. உங்கள் தலை மயிரை உடனே உங்களிஷ்டப்படி அமைக்க முடிகிறது—மேலும் நீங்கள் நினைத்ததை விட அதிக அழகுடன் விளங்குகிறது.

டியாரா லானோலின் லோஷன் ஷாம்பூ
உங்கள் தலை மயிருக்கு புத்துயிர் அளிக்கிறது.

**ஜே.கே.ஹெலன் கர்டிஸ்**

பூரண விநியோகஸ்தர்கள்.
ஸ்பென்ஸர் அண்டு கம்பெனி லிமிடெட்.
மதராஸ் . பம்பாய் . டெல்லி . கல்கத்தா.

mas-JKH-5656C. TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon